1767



# மாஜி மனிதர்கள்

[ஜெகசிற்பியன்]

துப்பறியும்

மர்ம நாவல்

1767




பிரசுரித்தோர்:
சதர்ன் புக் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்
13, நரசிங்கபுரம் தெரு, மவுண்ட் ரோடு,
சென்னை-2.

விலை 8 அணா

முதற் பதிப்பு :
பிப்ரவரி 1957

காபிரைட் :
சிரஞ்சீவி.



அச்சகம் :
பாபுஜி பிரஸ்,
187, மவுண்ட் ரோட்,
மதருஸ்-2.

சிரஞ்சீவியின்

## துப்பறியும் நாவல்கள் :

| | | |
|---|---|---|
| மர்மக் கொலை | ரூ 1 | 0 |
| மாயவில்லா | 1 | 0 |
| நீதி மயக்கம் | 1 | 0 |
| சூனியக்காரி | 1 | 0 |
| காதலன் கொலை வழக்கு | 1 | 4 |
| மர்மத் தீவு | 1 | 4 |
| ரத்தப் பசி | 1 | 4 |
| மரண யாத்திரை | 1 | 8 |
| பேய் வீடு | 1 | 8 |
| கல் நெஞ்சன் | 1 | 8 |
| சவப் பெட்டி | 1 | 8 |
| புல்புல் ரம்பா | 1 | 8 |
| குல்மால் குபேரன் | 1 | 8 |
| பயங்கர மனிதன் | 2 | 0 |
| ஆகாசக் கோட்டை | 2 | 0 |
| கன்னியின் சாகஸம் | 2 | 0 |

# மாஜி மனிதர்கள்

1767

## 1

நேற்றிரவு சரியாகப் பன்னிரண்டு மணி இருக்கும். அமாவாசை இருட்புகையால் நெடியேறிப்போன சோற்றுப் பிண்டங்கள் உறக்க விகார போதையில் ஆழ்ந்து கிடந்த நடுச்சாம நேரம். அந்த நாள்ளிரவு சுகத்தை நாய்கள் கூட விழித்திருந்து அநுபவிக்க விரும்பாமல் வாலை வளைத்து வயிற்றில் புதைத்துச் சுருள ஆரம்பித்துவிட்ட நட்ட நடு நிசி.

நான் விழித்துக் கொண்டிருந்தேன்! கொங்கணத்துக் கோட்டான்போல் கொட்டுக் கொட்டென விழித்துக் கொண்டிருந்தேன். நான் மட்டுமா? இல்லை; என்னுடன் என் எதிரே மூன்று பேய்கள் வந்து உட்கார்ந்து கொண்டு ஒரே பாட்டும் சிரிப்பும் கூத்துமாய் அரட்டையடித்துக்கொண்டிருந்தன!

எனக்குப் படுகுஷியாகி விட்டது. அவற்றுடன் நானும் சேர்ந்துகொண்டு ஆடவும் பாடவும் ஆரம்பித்து விட்டேன்! நான் இப்போதெல்லாம் மனிதர்களுடன் அதிகம் பேசுவதில்லை. அவர்களுடன் நெருங்கிப் பழகுவதில்லை. நட்பு கொள்வதில்லை. உறவு பாராட்டுவதும் இல்லை! ஏனென்றால், நான் பார்க்கும், பேசும், பழகும் மனிதர்கள், மனிதர்களாக இல்லை. நல்லது சொன்னால் சிரிக்கிறார்கள்; நல்லதை எழுதினால் விரோதம் பாராட்டுகிறார்கள்; நல்லது செய்தால் எனக்கே குழி பறிக்கிறார்கள்! எதிரே இனிக்க இனிக்கப் பேசிவிட்டு, பின்னால் போய் புன்மை பேசுகிறார்கள்; பொறுமைப்படுகிறார்கள்; இழித்து ஏசுகிறார்கள்! மனிதர்

கள் மட்டும்தான் இப்படி இருக்கிறார்கள். வேறு எந்த ஜீவராசிகளும் அவர்களைப்போல் இல்லை. என் வீட்டு நாயும் பூனையும் ஆடும் மாடும்கூட மனிதர்களைப்போல அத்தனை மட்டமாக நடந்து கொள்ளவில்லை. எனவேதான், பேய்களுடன் நட்பு கொண்டேன்! அவைகளுடன் பேசவும் சிரிக்கவும் பழகவும் கற்றுக்கொண்டேன்! எந்தத் 'தலை வெட்டிச்சங்கத்'திலும் சேர்ந்து நான் இந்த 'சித்தி' பெறவில்லை. எந்த 'ஆவியுலக நிபுணர்'களிடமும் இதற்காக நான் பயிற்சி பெறவில்லை. 'மனிதர்களைவிட பேய்கள் எவ்வளவோ மேல்' என்று ஒருநாள் இரவு எனக்குள்ளாகவே முணகிக் கொண்டிருந்தேன். உடனே சில பேய்கள் என் எதிரே தோன்றி கை குலுக்கின! அன்று முதல் நாங்கள் நண்பர்களாகி விட்டோம்! அந்தப் பேய்களும் ஒரு காலத்தில் மனித ஜன்மங்களாக இருந்தவைகள் தாம். ஆனால் செத்த பிறகு அவை திருந்தி விட்டன. "சரீரம் என்ற ஒன்றுதான் மனிதர்களைக் கெடுக்கிறது; அதை இழந்தால் அவர்கள் தேவர்களே" என்று இந்தப் பேய்கள் அடிக்கடி என்னிடம் சொல்கின்றன! அதன் அர்த்தம், என்னையும் சீக்கிரம் செத்துவிடு என்பதுதான்! "சரீரத்தோடு இருப்பவன் யாரையும் நாங்கள் நம்புவதில்லை. அவர்களிடம் நட்பு கொள்வதும் இல்லை" என்று அவை என்னிடம் வற்புறுத்திச் சொல்கின்றன! "இன்னும் கொஞ்சநாள் பொறுங்கள்! இன்னும் கொஞ்ச நாள் பொறுங்கள்!" என்று சொல்லி இன்று வரை அவற்றை நைஸாக ஏமாற்றிக் கொண்டிருக்கிறேன்! உண்மையில் அவை ஏமாந்தனவா? இல்லை; ஏனென்றால் அவையும் ஒரு காலத்தில் மனித ஜன்மங்களாய் இருந்தவை தாமே?......

அந்த மூன்று பேய்களும் வாலிபப் பேய்கள். ஒன்று பெண் பேய்; மற்ற இரண்டும் ஆண்

பேய்கள்.

நீண்டநேர கொம்மாளத்துக்குப் பின் ஓர் ஆண் பேய் என்னைப் பார்த்துக் கேட்டது: "ஏன் ஸார்! எப்போதும் நீங்கள் மனிதர்களுக்காகவே கதை எழுதிக் கொண்டிருக்கிறீர்களே; எங்களுக்காக—நாங்கள் படித்து ரசிப்பதற்காக—ஒரு கதை எழுதக் கூடாதா?"

எனக்குச் சிரிப்பு பொத்துக்கொண்டு வந்துவிட்டது. "வாஸ்தவம்! உங்களுக்காக ஒரு கதை எழுதவேண்டும் என்று எனக்கு ரொம்ப நாளாக ஆசைதான். ஆனால் உங்களுக்கு எந்த பாஷையில் எழுதினால் புரியும் என்பதுதான் எனக்குப் புரியவில்லை!" என்றேன்.

இதைக் கேட்ட பெண் பேய் கேலியாகச் சிரித்துவிட்டு, "உலகத்திலுள்ள பாஷைகள் எல்லாம் எங்களுக்குத் தெரியும்! நாங்கள் பூலோகத்திலிருந்து மாஜி மனிதர்களான உடனேயே சர்வ மொழிப் பாண்டித்யம் பெற்றுவிடுகிறோம்! ஆகையால் நீங்கள் எந்த மொழியில் எழுதினாலும் அதைப் படித்து ரசிக்க எங்களால் முடியும்!" என்று பெருமை பொங்கக் கூறியது.

"அப்படியா? ரொம்பசரி! நான் தமிழிலேயே உங்களுக்குக் கதை எழுதுகிறேன். உங்களைப் பார்த்தால் தமிழ்ப் பேய்கள் போலத்தான் தோன்றுகிறது! பேசாமல் அப்படி உட்கார்ந்து கொண்டு, நான் எழுத எழுத. நீங்கள் ஒவ்வொரு தாளாக எடுத்துப் படித்துப் பார்த்துக்கொண்டு வரவேண்டும்! சமயாசமயங்களில் சிகரெட் கேட்பேன்; எடுத்துப் பற்றவைத்துக் கொடுக்க வேண்டும்! காபி கேட்பேன்; பிளாஸ்கில் இருந்து கிண்ணத்தில் ஊற்றிக் கொடுக்க வேண்டும்! நான் எழுதும் சபாஷ் என்னும்படியான நல்ல கட்டங்களைப் படித்து நீங்கள் ரசிக்கும்போது அந்தப் பெண் பேய் வந்து எனக்கு முத்தம் கொடுக்கவேண்டும்! எனக்கெல்

லாம் புகழ்தான் உணவு; உயிர்! அதிலும், அறி வுள்ள பெண்கள் புகழ்ந்துவிட்டால் நான் அப்ப டியே பூரித்துப்போவேன்! அதற்காகவே அதோ படுத்துத் தூங்குகிருளே ; அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டேன். அவள் ஆரம்பத்தில் என் எழுத்தைப் புகழ்ந்தாள். இப்போது 'பணம், பணம்' என்று ஒப்பாரி வைக்க ஆரம் பித்து விட்டிருக்கிருள்! எனவேதான் நான் இப் போது அதிகம் எழுதுவதில்லை. இன்னொரு முக்கிய நிபந்தனை: கதையின் நடுவில், 'அது ஏன் அப்படி? இது ஏன் இப்படி?' என்றெல் லாம் நீங்கள் என்னிடம் கேள்வி கேட்கக் கூடாது. அப்படிக் கேட்டால் எனக்குக் கோபம் வரும்! நான் இந்த சகாப்தத்தில் பிறந்திருக்கும் ஓர் தலைசிறந்த அறிஞன்! எனக்கு எல்லாம் தெரியும்—எது எப்படி இருக்க வேண்டும் என்று! என்ன, நான் சொன்னதெல்லாம் தெரிந்ததா?" என்று சொல்லி எழுத ஆயத்த மானேன்.

பேய்களுக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. ஒன்றையொன்று நெருக்கியடித்துக் கொண்டு என் எதிரே வந்து பதவிசாக உட்கார்ந்து கொண்டன!

எனக்கு ஒரு சந்தேகம். பேய்களைப் பார்த் துக் கேட்டேன்: "காதல் கதை வேண்டுமா? வீரக் கதை வேண்டுமா? ஹாஸ்யக் கதை வேண் டுமா? துப்பறியும் கதை வேண்டுமா?"

"எனக்கு வீரக் கதைதான் வேண்டும்!" என்று ஓர் ஆண் பேய் வீராவேசமாகக் கத்தியது.

"ஊஹூம்! எனக்கு ஹாஸ்யக் கதைதான் ரொம்பப் பிடிக்கும்!" என்று மற்ருேர் ஆண் பேய் நகைச் சுவைக் குரலில் சிணுங்கியது.

"இங்கே பாரும்! அந்தமாதிரிக் கதையெல் லாம் எனக்கு வேண்டாம்! காதல் சம்பவங்கள் நிறைந்த துப்பறியும் கதைதான் நீர் எழுத

வேண்டும்! எனக்கு அதுதான் பிடிக்கும்!" என்று இனிய குரலில் வாஞ்சையுடன் கொஞ்சியது பெண் பேய்.

'பெண் என்றால் பேயும் இறங்கும்' என்பார்கள். பேய் பெண்ணாக இருந்தால் மனிதன் அதற்கு இரங்க வேண்டியதுதானே? ஆகையால், பெண் பேயின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு காதல் சம்பவங்கள் நிறைந்த துப்பறியும் கதை எழுத ஆரம்பித்தேன்! இதனால் மற்ற இரண்டு ஆண் பேய்களுக்கும் கொஞ்சம் மன வருத்தம். இருந்தாலும் என் கதையைப் படிக்க அவை உற்சாகமாகவே இருந்தன.

நான் எழுத ஆரம்பித்தேன்!......

# 2

சூல் கொண்டிருந்த கருமேகங்கள் வான வெளியில் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தன. அவற்றின் கரு மண்டலத்தில் தேங்கி நின்ற தூய நீர் துளி வடிவம் பெற்று நில மடந்தையின் மடியில் சிதற நேரம் பார்த்துக் கொண்டிருந்தது. எங்கும் ஒரே பிரசவ புழுக்கம். மணத்தை அடக்கிக் கொண்டிருக்கும் மலர்களும், மதுவைத் தேக்கிக் கொண்டிருக்கும் நிலவும் நட்சத்திரங்களும் மந்தாரத் திரை போர்த்தி மறைந்திருந்து பேறுநோய் பட்டுக் கொண்டிருந்தன!

இத்தகையச் சூழ்நிலையிலிருந்த இந்த இனிய முன்னிரவு நேரத்திலே!......

உள்ளம் கொள்ளா அளவுக்கு உற்சாகம் பொங்கி வழிய, கையிலிருந்த 'ஹாக்கி ஸ்டிக்'கை ஒயிலாக உருட்டிச் சுழற்றிக் கொண்டே நடந்துவந்த நடனசபேசன், அந்தப் பாலத்தின் கீழே இருந்த ஒரு கரிய வழ வழப்பான பாறையின் மேல் ஏறி உட்கார்ந்தான்!

அன்று ஞாயிற்றுக்கிழமை. மறு நாள் 

நடக்கப்போகும் கல்லூரி வருஷாந்திர 'ஹாக்கி' விளையாட்டுப் போட்டிக்காக, இருட்டும்வரை 'பிராக்டீஸ்' செய்த 'பி-குரூப்' மாணவர்கள், வியர்வையால் தெப்பமாக நனைந்து விட்டிருந்த தங்களின் அழகிய 'ஜெர்ஸி' பனியன்களைக் கழற்றித் தோள்மீது போட்டுக்கொண்டு உல்லாசமாகப் பேசிச் சிரித்தவாறு, பக்கத்திலிருந்த 'கூல் டிரிங்ஸ் பார்லரு'க்குள் கும்பலாக நுழைந்தனர். நடனசபேசனும் இவர்களுள் ஒருவனாக இருக்க வேண்டியவன். ஏனென்றால் இந்தக் 'குரூப்'புக்கு அவன்தான் காப்டன். ஆனால் அவன் தன் சகபாடிகளுக்கு ஏதோ 'சால்சாப்' சொல்லிவிட்டு அந்த ரெயில்வே பாலத்தடிக்கு மெள்ள நழுவிவிட்டான்!

இங்கிருந்து இடதுபுறமாக, அவன் கல்லூரி ஹாஸ்டல் சுமார் ஒரு பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது. வடப்புறமாக சுமார் அரை பர்லாங்கு தூரத்தில் பெண்கள் ஹாஸ்டல் இருக்கிறது. இவை இரண்டுக்கும் மத்தியில், குறுக்கோட்டமாக ஓர் ஆறும், நெடுக்கோட்டமாக ரெயில் பாதையும் ஓடுகின்றன. கால் பர்லாங்கு அகலமுள்ள ஆற்றின் குறுக்களவுக்குப் பக்கச் சுவரற்ற இரும்புப் பாலம் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. அந்தப் பாலத்தின்மீது மூன்று ஜதை தண்டவாளங்கள் படுத்துக் கிடந்தன. ஒன்று நீராவி ரெயில் நெடுந்தொலைவுக்குப் போகும் பாதை. மற்ற இரண்டும் மின்சார ரெயில் வண்டிகள் வரவும் போகவுமாக அமைந்தவை. நீராவி ரெயில் பாதையில் எப்போதோ ஒருமுறை வண்டிவரும்; அல்லது போகும். ஆனால் மின்சார ரெயில் வண்டிப் பாதைகளில் ஐந்து நிமிஷத்திற்கு ஒருமுறை வண்டிகள் எதிரும் புதிருமாக ஓடிக்கொண்டே இருக்கும்.

பாலத்தின் கீழண்டைப் பக்கம் ஒரு சிறு மயானம். மேலண்டைப் பக்கம் சலவைத் தொழிலாளர்கள் சர்க்கார் அனுமதியின்றி

கட்டிக் கொண்டிருக்கும் ஐம்பது அறுபது ஓலைக் குடிசைகள். பாலத்தின் மட்டத்திலிருந்து சுமார் முப்பது அடிக்குக் கீழே வருஷம் முழுதும் வற்று மல் முழங்கால் அளவுக்கு ஜலம் ஓடிக்கொண்டே இருக்கும். அந்த ஜலம் சகல கிருத்தியங்களுக் கும் உபயோகமாவதால் பச்சை நிறம் பாய்ந்து பசபசத்து விட்டிருக்கும். அடை அடையாகப் பாய்போல் பச்சைப் பாசி படர்ந்து அதன்மேல் பெரிய பெரிய கொசுக் கூட்டம் குந்தி 'ஜல தரங்கம்' மீட்டிக் கொண்டிருக்கும்!

பாலத்தின் மேற்கே, 'லெவல் கிராஸிங் கேட்' ஒன்று உண்டு. ஐந்து நிமிஷத்திற்கொரு முறை மின்சார இயக்குதலால் இயங்கும் மணி யோசையைக் கொண்டு அந்த இரும்பு 'கேட்'டு களைத் திறந்தும் மூடிக்கொண்டும் இருப்பார்கள் ரெயில்வே காங்கி ஆட்கள். இதன் அறிகுறி யாகப் பாலத்திற்கு இந்தப்புறமும் அந்தப் புறமும் உள்ள இரு 'சிக்னல் போஸ்டு'களில் இரவு பகல் எந்நேரமும் பச்சை சிவப்பு ஆரஞ்சு நிற விளக்குகளில் ஏதாவதொன்று மாறி மாறி எரிந்து கொண்டே இருக்கும்.

பணக்காரர்கள் பங்களா கட்டிக்கொண்டு வாழும் பிரதேசம் அது. ஆகையால் அங்கே அதிக ஜன நடமாட்டம் இராது. ஆனால் வித விதமான கார்கள், ரெயில் பாதையின் குறுக்கே விழுந்து செல்லும் சாலையில் எந்நேரமும் ஓடிக் கொண்டிருக்கும். அடிக்கொருதரம் ரயில் வண் டிப் போக்கு வரத்துக்காக லெவல் கிராஸிங் கதவுகள் மூடப்படும்போதெல்லாம் அங்கே இரண்டு பக்கமும் கார்களும் மற்ற வாகனுதி களும் கும்பலாகச் சேர்ந்து குழுமிவிடும். மூடிய கதவுகள் திறக்கப்பட்டதும் அவை ஒன்றை யொன்று முந்திக்கொள்ள போட்டி முயற்சி கள் நடக்கும். இதனுல் அங்கே அடிக்கடி விபத்துக்கள் நடப்பது சகஜமாகிவிட்டிருந் தது! இம்மாதிரி விபத்துக்களுக்குப் பெரும்

பாலும் அந்தக் கல்லூரியில் படிக்கும் மாணவ மாணவிகள் தாம் உள்ளாகிவந்தார்கள் !

இதற்குப் பயந்து கொண்டே, ரெயில் பாதைக்கு அந்தப் புறமுள்ள ஹாஸ்டலில் இருக்கும் மாணவிகள், இந்தப் புறமுள்ள கல்லூரிக்கு வர ஒரு குறுக்கு வழியைக் கண்டு பிடித்து வைத்திருந்தார்கள். ஆற்றில் இறங்கிப் பாலத்தின் உள்ளே புகுந்து சாலையில் ஏறிக் கல்லூரியை அடை.வதுதான் அந்தக் குறுக்கு வழி. இதனால், அந்தப் பாலத்தின் கீழே ஒரு நல்ல கொடிப் பாதையே உண்டாகி விட்டிருந்தது. மாணவிகள் இவ்வழியே பகல் நேரங்களில் தான் வருவார்கள். இருட்டியதும் யாரும் அந்தப் பக்கம் தலை காட்டமாட்டார்கள். இதற்கு மூன்று காரணங்கள் இருந்தன.

ஒன்று, அப்பாலத்தின் அருகில் மயானம் இருக்கிறது. அதில் எப்போதும் ஏதாவது ஒரு பிணம் எரிந்து கொண்டே இருக்கும்!

இரண்டாது, ரெவயில்வே அதிகாரிகள் எச்சரிக்கையையும் மீறிப் பாலத்தின் மீது நடக்கும் பாதசாரிகள், அங்கே அடிக்கடி முன்னும் பின்னுமாக ஓடிவரும் மின்சார ரெயில் வண்டிகளில் அகப்பட்டு அநியாயமாகத் தங்கள் உயிரைப் பலி கொடுத்துக் கொண்டு வந்தார்கள். இந்த அவல நிகழ்ச்சிகள் அங்கு நிகழ்வது ரொம்பவும் சகஜமாகிவிட்டிருந்தது!

மூன்றுவது, பிஞ்சில் பழுத்த கல்லூரி மாணவர்கள் மாலை நேரங்களில் அந்தப் பாலத்தின் இரண்டு பக்கங்களிலுமுள்ள மதில் சுவர்களின் மீது வந்து உட்கார்ந்து 'மன்மத அட்டகாசம்' பண்ணிக் கொண்டிருப்பார்கள் !

இம்மாதிரி காரணங்களுக்காகவே, இருட்டியதும் அந்தப் பக்கம் வர அஞ்சினார்கள் மாணவிகள்! இவற்றுக்கெல்லாம் அஞ்சாத சில மாணவிகளும் உண்டு. அவர்களுக்கு அந்தப் பாலத்து அடிதான் 'ரொமான்ஸ் கார்டன்'க விளங்கியது!

என்னதான் இருந்தாலும் இரவு எட்டு மணிக்கு மேல் யாரும் அங்கு பெரும்பாலும் வர மாட்டார்கள்.

பேய் பயம் பொல்லாதது அல்லவா?......



இந்த இடத்தில் ஓர் ஆண் பேய் எழுந்து நான் இப்படி எழுதிய அந்த வரியை ஆட்சேபித்தது. "நாங்கள் என்ன, அத்தனை அவலட்சணமாகவா இருக்கிறோம்? எங்களைப் பார்த்து ஜனங்கள் ஏன் பயப்படவேண்டும்?"

பேனாவைக் கீழே வைத்துவிட்டு நிமிர்ந்தேன். "நான் முதலிலேயே உங்களுக்கு ஒரு கண்டிப்பான நிபந்தனை போட்டிருக்கிறேன். நான் எழுதும் எதையும் நீங்கள் ஆட்சேபிக்காமல் 'கப்சிப்' என்று படித்துக் கொண்டு வர வேண்டும். 'அது ஏன்? இது கூடாது' என்றெல்லாம் குறுக்கே பேசக் கூடாது! தெரிந்ததா?" என்றேன் சற்று கோபமாக.

"அவர் எப்போதும் அப்படித்தான். அவசரக்காரர்! முந்திரிக்கொட்டை! இந்தக் குணம் அவரிடம் இல்லையென்றால் நாங்கள் இவ்வளவு சீக்கிரம் இப்படி மாறி மனிதர்களாகியிருப்போமா? கோபம் பண்ணிக் கொள்ளாமல் எழுதுங்கள்!" என்று பெண் பேய் அன்பாகச் சொல்லி என் கன்னத்தை வருடியது.

"என்ன இருந்தாலும் நீங்கள் எங்களை எதிரே வைத்துக் கொண்டே இப்படி இழிவு படுத்தக் கூடாது!" என்று முணகிக் கொண்டே முகத்தை 'உம்' மென்று வைத்துக் கொண்டது அந்த ஆண் பேய். மூன்றாவது பேய் புன்முறுவல் பூத்தவாறே மௌனமாக உட்கார்ந்திருந்தது.

"சிகரெட்!" என்றேன்.

மேஜை மீது கிடந்த சிகரெட் பாக்கெட்டை எடுக்காமலே மாயமாக ஒரு சிகரெட்டை வாங்கி என் வாயில் பொருத்தியது பெண் 

பேய்! சிகரெட்டின் முனையில் ஏற்கனவே தீப் பற்றி இருந்தது! ஜம்மென்று ஓர் இழுப்பு இழுத்து புகையைக் குபுகுபுவென அந்தப்பெண் பேயின் முகத்துக்கு நேரே விட்டேன்! ஆஹா! என்ன மணம்! என்ன சுகம்! என்ன சுவை!...

உற்சாகமாகப் பேனாவை எடுத்துக் கதையின் விட்ட இடத்தைத் தொட்டு எழுத ஆரம்பித்தேன்!......



நடனசபேசன் இயற்கையிலேயே மகா தைரியசாலி. ஆஜானுபாகுவான அவன் உடலைப் போல அவனது மனமும் வைரம் பாய்ந்தது. பி. ஏ. கடைசி வருஷம் படித்துக் கொண்டிருந்த அவனுக்குச் சொந்த ஊர் சிதம்பரம். பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்த ஒரே பையன். பணத்தால் சகல வசதிகளும் செய்து கொண்டு ஹாஸ்டலில் தங்கிப் படித்து வந்தான் அவன்.

ஹாக்கி விளையாட்டில் சபேசன் மகா நிபுணன். அந்தக் கல்லூரியிலேயே அவனுக்கு சமமாக ஹாக்கி விளையாடும் மாணவர்கள் வேறு யாரும் இல்லை. அவன் ஒருவனுடைய துணை வைத்தே அந்தக் கல்லூரி பல கல்லூரிகளை ஹாக்கிப் பந்தயத்தில் தோற்கடித்து இருக்கிறது. எத்தனையோ 'கப்'புகளும், 'ஷீல்டு'களும், 'மெடல்'களும் பெற்றிருக்கிறது. விளையாட்டில் வீரனாயிருந்த சபேசன் உலக வழக்கப் படி படிப்பில் கடைசி மாணவனாயிருந்தான்! இதற்காக, அவனோ அவன் பெற்றோரோ கவலைப்படவில்லை. பணம் இருக்கிறது; பாஸாகும் வரை படித்துக் கொண்டிருந்தால் போகிறது! கல்லூரி ஆசியர்களும் அவனைப் பற்றிக் கவலைப்படவில்லை. சபேசன் இந்தக் கலூரியில் இருக்கும் வரை அக்கல்லூரிக்கு விளையாட்டுத் துறையில் நல்ல பெயர் அல்லவா?

ஆனால்—

சபேசன் படிப்பில் கவனம் செலுத்தாது இருப்பதற்காக கவலைப்பட்டுக் கொண்டிருப்பது ஒரே ஓர் ஆத்மாதான். அது ஆண் ஆத்மா அல்ல; பெண் ஆத்மா! அவள் பெயர் மல்லிகா!......

மல்லிகா, நடனசபேசனுடன் ஒரே கல்லூரியில் ஒரே வகுப்பில் படிக்கும் சக மாணவி. அவளும் ஹாஸ்டலில் இருந்துகொண்டு படித்து வருபவள்தான். சொந்த ஊர் தஞ்சை. நடுத்தரக் குடும்பத்தில் பிறந்தவள். அவளின் அழகை வர்ணித்தால் அது மாசுபட்டுவிடும்! ஆகையால் அவளை 'அழகி' என்ற ஒரே வார்த்தையோடு நிறுத்திக்கொள்ள வேண்டும்! அந்தக் கல்லூரியில் மொத்தம் ஐம்பது மாணவிகள் படிக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் அழகின் தலைவியாய் விளங்குபவள் மல்லிகாதான்!

அழகுடைய எது ஒன்றுக்கும் ஆபத்தான சூழ்நிலை அமைவது இயற்கை. ரோஜா முட்களாலும், தேன் ஆடை ஈக்களாலும், நீலக் கடல் ஆர்ப்பரிக்கும் அலைகளாலும் சூழப்பட்டிருக்கின்றன அல்லவா? மல்லிகாவும் இப்படித்தான் அந்தக் கல்லூரி மாணவர்களின் 'காதல் பார்வை' என்ற வலைக்கிடையே அகப்பட்டுத் தவியாய்த் தவித்தாள்! மாணவர்கள் மட்டும் தானா அவளைச் சுற்றி வட்டமிட்டார்கள்? இல்லை. அந்தக் கல்லூரி ஆசிரியர்களில் ஓர் ஆசாமியும் அவளை மோப்பம் பிடிக்க ஆரம்பித்தார். அந்த ஆசாமி அதே கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்று அதே கல்லூரியில் தமிழாசிரியராக வேலைபார்த்து வருபவர். தமிழைத்தான் படித்தாரே தவிர அவர் பேசுவது தமிழாய் இருக்காது. வீட்டில் தெலுங்கு பேசும் அந்த ஆசாமி தமிழையும் அதே ஓசையுடன்தான் பேசுவார்! அந்தக் கல்லூரியில் செல்வாக்குள்ள ஒரு பேராசிரியரைக் 'காக்கா' பிடித்து எப்படியோ அந்த உத்தியோகத்துக்கு வந்து

விட்டவர். அவருக்குக் கல்யாணமாகிவிட்டது. ஓர் ஆண் குழந்தையும் உண்டு. அவர் மனைவி ஒரு 'காட்டுப் பூனை ஜாதி'! தமிழ்ப் பேச சங்கடம். தெலுங்குதான் தெரியும். தொரட்டுக் கொம்புபோல நெடு நெடு என்று வளர்ந்து இருப்பாள். வருஷத்துக்கு ஓர் 'அபார்ஷன்' செய்யத் தவறமாட்டாள்! அதனால் கால்கள் ஆச்சரியக் குறியாகவும், முதுகு கேள்விக் குறியாகவும் இருக்கும்! மகா கர்வி! ஏமாந்தால் கணவனையே கீழே தள்ளி நெஞ்சின்மேல் ஏறி உட்கார்ந்து கொள்வாள்! ஒரு சின்ன யானைக் குட்டிபோன்ற தோற்றமுள்ள அந்த ஆசிரியர் தன் மனைவியின் எதிரே பெட்டிப் பாம்புதான்! அந்த அம்மையார் ஆறு மாசம் கணவன் வீட்டில் இருப்பாள்; ஆறு மாசம் தாய் வீட்டில் இருப்பாள். புருஷன் அழகாய் இல்லை என்ற காரணத்துக்காக அவள் ஒருமுறை 'விவாக ரத்து செய்யப் போகிறேன்' என்று 'புரட்சிக் கொடி' உயர்த்தி, பிறகு பலரின் தலையீட்டால் அதைக் கீழே தாழ்த்திவிட்டாளாம்! இப்படிப் பட்ட சூழலில் வாழும் அந்தத் தமிழாசிரியருக்கு எப்படித்தான் ஒரு பெண்ணைக் காதலிக்கத் துணிவு ஏற்பட்டதோ தெரியவில்லை. என்னவோ ஒரு கோளாறு; இந்தவேலையில் இறங்கி விட்டார்!......

மல்லிகா மண் அல்ல; கல் அல்ல; மரமும் அல்ல. மென்மையான உணர்ச்சிகளால் உருவான மனித ஜன்மம்தான் அவள்! பெண்ணாய்ப் பிறந்த பிறகு யாரையாவது ஒருவனைக் காதலித்துத்தானே ஆகவேண்டும்? அதுவும் கல்லூரிப் படிப்புப் படிக்கவந்த பிறகு எவனையாவது காதலிக்காமல் இருக்க முடியுமா? இருக்கலாமா! காதலிக்காத கல்லூரிப் பெண்கள், குலைக்காத நாய்களுக்குச் சமம் அல்லவா? கொஞ்ச நேரத்திற்காவது குலைத்துவிட்டுப் படுத்துக்கொள்ளும் நாய்களைப்போல, கொஞ்ச காலத்திற்காவது

எவனுவது ஒருவனை அவர்கள் காதலித்துத்தான் ஆகவேண்டும்! இல்லை யென்றுல் கல்லூரி வாழ்க்கை கவைக்குதவாததாகிவிடும்! படித்த பட்டப் படிப்பு பூர்த்தியாகாது! கண்ருவித் தத்துவம்!—

மல்லிகா இந்தக் கல்லூரிக்கு வந்த நாள் முதல் இன்றுவரை ஏனே 'குலைக்கத் தெரியாத நாயாகவே' இருந்துவந்தாள்! எவ்வளவு நாளுக்கு அவள் இப்படி இருந்துவிட முடியும்? அழகும் ஆண்மையும் பொருந்திய நடனசபேசன், சென்ற மாசம் முதல் அவளைக் 'குலைக்க', வைத்து விட்டான்! அதுமுதல் அவள் அவனைப் பார்த்துப் பலமாகக் 'குலைக்க' ஆரம்பித்து விட்டாள்! குலைக்காத நாய்கள் குலைக்க ஆரம்பித்து விட்டால் சீக்கிரத்தில் ஓயாதாம்! மல்லிகாவும் அந்தமாதிரி 'ஜாதிக்காரி' போலிருக்கிறது!

அவள் அவனைப் பார்த்துக் 'குலைக்க', அவன் அவளைப் பார்த்துக் 'குலைக்க', இவ்விருவரின் 'கூச்சலும்' ஏகப்பெரிதாகி, அந்தக் கல்லூரியையே கிடு கிடுக்க வைத்துவிட்டது!

இந்தக் 'கூச்சலை'க் கேட்ட ஒவ்வொரு மாணவ—மாணவியும் பொருமையால் புழுங்கிச் செத்தார்கள்! ஆசிரியர்களும் ஹாஸ்டல் வார்டன்களும் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தார்கள்! மல்லிகாவைக் காதலிக்க முழு வேகத்துடன் முயன்றுகொண்டிருந்த அந்தத் தமிழாசிரியர்தான் ரொம்பவும் மனம் உடைந்துபோய் விட்டார்! இந்த விஷயம் அநாமதேயக் கடிதங்கள் மூலம் சிதம்பரத்துக்கும் தஞ்சைக்கும் பறந்தன! பறந்தென்ன பிரயோசனம்? நடனசபேசனையும் மல்லிகாவையும் 'குலைக்காமல்' இருக்கச் செய்ய முடியவில்லை! இவ்வளவும், இவ்விருவரும் நேருக்கு நேர் சந்தித்துப் பேசிக்கொள்ளாமல், வெறும் கண் ஜாடை, புன்முறுவல் மூலமே நடந்தேறிவிட்டன!

இன்றுதான் அவனும் அவளும் நேருக்கு நேர் சந்தித்துத் தங்கள் காதலை வைரச் சிலை யாக்கிக்கொள்ளப் போகிறார்கள். இதுவரை எட்ட முடியாத தூரத்தில் எட்டி இருந்தே இழுபறி பட்டுக்கொண்டிருந்த காந்தமும் இரும்புத் துண்டும் இன்றுதான் அருகே அருகே நெருங்கி ஒன்றேடு ஒன்று ஒட்டிக்கொள்ளப் போகின்றன!......

மாலை மூன்று மணிக்கு வருப்பு முடிந்து போகும்போது ஒரு சிறு கடிதத் துண்டில் இந்த இன்பச் செய்தியை எழுதி சபேசனின் கையில் திணித்துவிட்டு ஓடிவிட்டாள் மல்லிகா!

"இன்று முன் நிலவு: முழு நிலவு. இரவு ஏழரை மணிக்கு ரெயில்வே பாலத்தண்டை வந்து இருங்கள். நான் வருவேன்; தவரு மல் வருவேன்."

அந்தக் கடிதத்தைப் படித்தது முதல், நடன சபேசனின் உள்ளம் ஆனந்த நடனமே ஆட ஆரம்பித்து விட்டிருந்தது! பரீட்சை காலத்தில் கூடப் படிக்க நினைக்காத 'ஷேக்ஸ்பியரை' எடுத்து வைத்துக்கொண்டு, அதில் 'ஜூலியட்டை' இரவில் சந்திக்கச் சென்ற 'ரோமியோ' எப்படிச் சித்தரிக்கப்பட்டிருக்கிறுன் என்பதை பலமுறை படித்துப் பார்த்துக்கொண்டான்! பிறகு அரண்மனைச் சுவரேறி அமராவதியைச் சந்திக்கச் சென்ற அம்பிகாபதி எப்படி வர்ணிக்கப்பட்டிருக்கிறுன் என்று பழம் பாடல்களைத் தேடிக் கண்டுபிடித்துப் படித்துப் பார்த்தான்! இந்த ஆராய்ச்சிலேயே அவன் இருந்துவிட்டதால் அன்று அவன் ஹாக்கி ஆட்டத்தைக்கூடச் சரிவர ஆடவில்லை. ஆட்டம் முடிந்ததும், விளையாட்டு உடையான வர்ண 'ஜெர்ஸி'யைக்கூடக் கழற்றுமல், 'ஹாக்கி ஸ்டிக்'குடன் அப்படியே இந்தப் பாலத்தடிக்கு ஓடி வந்துவிட்டிருக்கிறுன்! அவன் இங்கே வந்து ஏறக்குறைய முக்கால்மணி நேரமாகிவிட்டது. சுமார் பத்துப் பதினைந்து

மின்சார ரெயில் வண்டிகள் அப்படியும் இப்படியுமாக வந்து ஓடிவிட்டன! ஆனால்...ஆனால்...?

## 3

இடது கை மணிக்கட்டில் கட்டியிருந்த 'ரேடியம்' பதித்த கடிகாரத்தை நிலவொளியில் தூக்கிப் பிடித்து மணி பார்த்தான் சபேசன். ஏழரையாகி ஐந்து நிமிஷம்.

இன்னும் ஏன் மல்லிகா வரவில்லை? ஒரு வேளை, வர மறந்துவிட்டாளா? இதை மறந்தால் அவள் மூச்சுவிடக்கூட மறந்துவிடுவாள்! எனவே, நிச்சயமாக மறந்திருக்கமாட்டாள். இன்னும் இரண்டொரு நிமிஷத்தில் வந்துவிடுவாள் —சபேசனின் மனம் படபடவென துடித்துக் கொண்டிருந்தது.

கண்ணுக்கெட்டிய தூரம்வரை மனித வாடையே வீசவில்லை. சர்வ நிசப்தத்தில் அந்தப் பிரதேசம் அழுந்திக் கிடந்தது. அப்போதைக்கு அப்போது தொலை தூரத்தில் இரண்டொரு நாய்கள் தனிக்குரல் எழுப்பி ஓசையுடன் ஊளையிடுவது அங்கு நிலவியிருந்த நிசப்தத்தை மிகைப்படுத்துவதாயிருந்தது. பாலத்தின் பக்கத்தில் இருந்த மயானத்தில் எரி மூட்டிய பச்சைப் பிணம் ஒன்று ஏகமாகப் பற்றி எரிவது வான விதானத்தின் விளிம்புவரை செவ்வொளியேறிப் பிரகாசமாய்த் தோன்றிற்று. இந்த நெஞ்சுருட்டும் சூழ்நிலையில் தன்னந்தனியாக உட்கார்ந்திருப்பது, தைரியசாலியான நடன சபேசனுக்கே சற்று அச்சமாகத்தான் இருந்தது! சுற்று முற்றும் திருதிருவெனப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன்.

பாலத்தின் முனையில் நின்றிருந்த 'சிக்னல் போஸ்டில்' குடிபோதை கொண்ட ஒரு பூதத்தின் கண்ணைப்போல எரிந்துகொண்டிருந்த சிவப்பு விளக்கு அணைந்து, அன்பு நிறைந்த

காதலி ஒருத்தியின் பசுமைக் கண்ணைப்போலப் பச்சை நிறத்துடன் பட்டென எரிந்தது.

இதே சமயம் பக்கத்திலிருந்த 'லெவெல் கிராஸிங் கேட்'டண்டையிருந்து 'கதவை மூடு' என்பதற்கு அறிகுறியாக மணி கணகணவென ஒலிக்க ஆரம்பித்தது.

இந்த மணியோசையைக் கேட்டதும் சபேசனுக்கு என்னமோ ஒருவித தைரியம் பிறப்பது போலிருந்தது. குஷியாக நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு, வாசனை தோய்த்த கைத்துண்டை எடுத்து வியர்வையால் நனைந்திருந்த முகத்தைத் துடைத்துக்கொண்டான். தூரத்தில், சுடலையில் எரிந்துகொண்டிருந்த பிணம் கருகித் தீய்வது கர்ண கடூரத் துர்நாற்ற நெடியாக எழும்பிக் ககனக் காற்றில் கலந்து கொண்டிருந்தது.

நடன சபேசன் திடீரென ஒரு துள்ளுத் துள்ளிப் பாறைமீதிருந்து கீழே குதித்தான். அவன் தலைக்கு மேலேயிருந்த தண்டவாளம் அதிர, மின்சார ரெயில் வண்டியொன்று 'கட கடா, கடகடா' வென்ற பேரொலியைக் கிளப்பி ஓடி மறைந்தது! இந்தச் சப்தத்தைக் கேட்டுத் தான் அவன் அப்படி அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து நின்றான்!

என்ன பைத்தியக்காரத்தனம்! பாலத்தின் மீது வண்டி புகுந்து ஓடும்போது எழும் இந்தச் சப்தத்தை, அவன் இன்று நேற்று கேட்கிறான்? கல்லூரி ஹாஸ்டலுக்கு வந்த, சென்ற ஐந்து வருஷ காலமாக, இரவு பகல் என்றில்லாமல் இந்தப் பேரொலியைக் கேட்டுக்கொண்டிருக்கிறான். இவ்வூருக்கு வந்த புதிதில் இந்தச் சப்தம் அவனுக்குப் பெரிய தொல்லையாக இருந்தது என்னமோ உண்மைதான். ஆனால், நாளாக ஆக இவ்வொலி கேட்டுக் கேட்டுப் பழக்கப்பட்டுவிட்டது. இனிய வாத்தியக் கருவியொன்றின் கீதம்போல் அது அவனுக்குப்

பழக்கமாகிவிட்டது! நாளெல்லாம் ஆட்டமும் அரட்டையுமாக நேரத்தைக் கழித்துவிட்டு இரவில் விளக்கைப் போட்டுக்கொண்டு படிக்க ஆரம்பித்தானுனல் இந்தப் பாலத்தின்மீது வண்டி போகும்போது எழும் 'கொடா கொடா' சப்தம் அவனை அப்படியே தூக்கிக்கொண்டு போய்க் கட்டிலில் கிடத்திப் போட்டுவிடும்! கல்லூரில் வருஷா வருஷம் 'கோட்'டடிக்கும் மாணவர்களைக் காரணம் கேட்டால், அவர்கள் கொஞ்சமும் தயங்காமல் இந்தப் பாலத்தின்மீது தான் பழியைச் சுமத்துவார்கள்!...

இப்படிப் பல காலம் கேட்டுக் கேட்டுப் பழகிய இந்தச் சப்தத்தைக் கேட்டா சபேசன் இப்போது அலறித் துடித்துவிட்டான்? ஆம். அவன் மட்டுமென்ன? அந்த வண்டியை ஓட்டும் டிரைவரை இழுத்துவந்து இந்த நேரத்தில்இங்கு உட்காரவைத்தால், அவன்கூட இப்படித்தான் அலறிப் புடைத்துவிடுவான்! பாலமே அதிர்ந்து வீழ்வதுபோல் தலைக்குமேல் வண்டி பேரிரைச் சலிட்டுக்கொண்டு ஓடும்போது அதன் கீழே உட்கார்ந்திருந்த சபேசனுல் துணுக்குருமல் இருக்க முடியவில்லை! சாதாரண நேரமாயிருந் தால் பரவாயில்லை: இரவு நேரம். ஜனசந்தடி யற்ற மயான அமைதி சூழ்ந்திருக்கும் வேளை. காதலியின் வருகையை எதிர்பார்த்துப் பார்த் துக் கண்ணும் மனமும் பலஹீனமாகி விட்டிருக் கும் சமயம். இந்தச் சமயத்தில், மண்டைமீது வண்டி ஓடுவதுபோன்ற அதிர்ச்சி ஏற்பட்டால் யார்தான் அலறி எழாமல் இருக்கமுடியும்?

நடன சபேசன் மறுபடியும் தன் கைக் கடியாரத்தில் மணி பார்த்தான் ; ஏழே முக்கால்! மல்லிகா ஏன் இன்னும் வரவில்லை? இந்தக் கேள்வி அவன் நெஞ்சிலிருந்து பீறிட்டுஎழுந்தது.

மல்லிகா ஏமாற்றி விட்டாளா?

சபேசன் மறுபடியும் பாறைமீது ஏறி உட்கார்ந்துகொண்டு தொலைதூரம் வரை 

தன் கண்ணேக்கைச் சுழற்றி வீசினுன். ரெயில் தண்டவாளத்தின் அருகே உள்ள உயரமான ஒற்றையடிப் பாதையில்—கிரேவல் கற்களை ஒட்டினுற்போலிருந்த கொடி வழியில்—யாரோ ஓர் உருவம் வெள்ளை ஆடை அணிந்து மெள்ள நடந்து வருவது போலிருந்தது!

ஒருவேளை அந்த உருவம் மல்லிகாவாக இருக்கலாமோ?....

அவள் ஏன் அந்தப் பக்கம் வருகிருள்? ஆற்றின் ஓரமாக வந்து பாலத்தினுள் புகுந்து அல்லவா வரவேண்டும்? அதுதானே சரியான குறுக்குப் பாதை? ஒருவேளை ஆற்றுப் பக்கம் தனியாக வரப் பயந்து கொண்டு, சுற்றுப் பாதையாலும் பரவாயில்லையென, ரெயில் பாதையில் ஏறி வருகிருளோ? சபேசனை அவள் பாலத்தின்மேல் சந்திப்பதாக எழுதி இருந்தாளா? அல்லது பாலத்தின் கீழே சந்திப்பதாக எழுதியிருந்தாளா?

இப்படியெல்லாம் நினைத்துப் பார்த்த சபேசனுக்கு ஒரே குழப்பமாகி விட்டது. நன்ருகக் கண்களைக் கசக்கி விட்டுக்கொண்டு, எதிரே தொலைதூரத்தில் நடந்துவந்த அந்த உருவத்தை உற்றுப் பார்த்தான்.

என்ன ஆச்சரியம்! அந்த உரு இப்போது காணவில்லை! அது எங்கே? எந்தப் பக்கம் போய் மறைந்து விட்டது? உண்மையிலேயே அது ஓர் உருவம்தானு? அல்லது மல்லிகாவையே தியானித்துக்கொண்டிருந்த சபேசனின் கண்களுக்கு மட்டும் தோன்றிய உருவெளித் தோற்றமா? மாயக் காட்சியா?

பல உயிர்களைப் பலி கொண்ட பாலம்; பக்கத்தில் சுடுகாடு இருக்கிறது! ஆகையால் ஒருவேளை அந்த உருவம்?......

எண்ணற்ற கேள்விக் குறிகளால் மனம் அதிர்ந்து ஆடத் தன்னிடமிருந்த தைரியம் அனைத்தையும் ஒன்று திரட்டி உள்ளத்தில்

கொட்டி அடைத்துக்கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தான் சபேசன்.

பாலத்தின் மேல்முனையிலிருந்த 'சிக்னல்' கம்பத்தில் மறுபடியும் பச்சை விளக்கு எரிந்தது. அதே சமயம், பக்கத்திலிருந்த 'லெவல் கிராஸிங்' கிலிருந்து மணியடிக்கும் சப்தமும் கேட்டது.

சற்றுநேரம் வரை ஒலித்துக் கொண்டிருந்த மணிச் சத்தம் நின்று, கதவுகளை மூடிப் பூட்டும் 'லொட்'டென்ற ஒலி கேட்டது. தூரத்தில் மின்சார வண்டியொன்று வருவதற்கு அறிகுறியாக விளக்கு வெளிச்சம் நெடுங்குத்தாக முன்னே பாய்ந்து வந்தது. சற்று நேரத்திற் கெல்லாம் வண்டி பாலத்தின் மீது வந்து ஏறியது.

பாலத்தின்மேல் வண்டி ஓடும்போது முன் போல் சபேசன் இப்போது அலறியடித்துக் கொண்டு எழுந்திருக்கமாட்டான். ஒரு முறை அநுபவமாகி விட்டது அல்லவா? தைரியமாகத் தன் இருப்பிடத்திலேயே உட்கார்ந்திருந்தான்.

பசிகொண்ட வேங்கைபோல் வாயு வேகத்தில் ஓடிவந்த மின்சார ரெயில் வண்டி பெருத்த ஒலியுடன் பாலத்தின்மீது புகுந்து ஓடியது.

அதே சமயம்—

பாலத்தின் கீழே, தண்டவாளத்தின் நேர் அடியில், பாறையின் மீது உட்கார்ந்திருந்த நடன சபேசனின் மடியில், ஏதோ ஓர் உருண்டையான பொருள் தொபீரென விழுந்தது! வண்டி யோடும் ஒலியைக் கேட்டுப் பயப்படாமல் உட்கார்ந்திருந்த அவன், இந்தப் 'பொருள்' விழுந்த அதிர்ச்சியால் 'ஹா'வென வாய்விட்டு அலறியே விட்டான்!

அலறியபடி தரையில் துள்ளிக் குதித்த அவன் மீது, மறுபடியும் மற்றொரு நீளமான பொருள், பொதி மூட்டைபோல் விழுந்தது! நெஞ்சோட்டமே நின்று விடுவது போலப் பெருத்தக் குரலெழும்பிக் கூவி விட்டான் சபேசன்! அவனுடைய திண்மை பொருந்திய 

உடல் கிடுகிடுவென நடுங்கியது. எனினும் அவனிடமிருந்த தைரியம் துப்புரவாகப் போய் விடவில்லை. சடக்கெனக் குனிந்து, அவன் காலுக்கு அடியில் கிடந்த உருண்டையான பொருளை இடது கையால் தூக்கி நிலவொளியில் உற்றுப் பார்த்தான். அவன் அணிந்திருந்த அழகிய 'ஜெர்ஸி' பனியனும், அந்தப் பொருளைப் பற்றிக் கொண்டிருந்த அவன் இடது கையும் ஒரே இரத்தச் சேற்றில தோய்ந்து நனைந்துவிட்டிருந்தன!

அந்தப் 'பொருள்?'—

இரட்டைப் பின்னலிட்டு அதில் மல்லிகை மலர் சூடியிருந்த மனித முகம்! மனிதத் தலை!! அது ஒரு பெண்ணின் தலை!!!

"ஹா!...மல்லிகா!" என்று அந்தப் பிரதேசமே கிடுகிடுக்கும் வண்ணம் அலறி விட்டான் நடன சபேசன்.

அடுத்த கணம், தன் கையிலிருந்த அந்த வெட்டுண்ட தலையைத் தூர வீசி எறிந்துவிட்டு ஹாஸ்டலை நோக்கித் தலைதெறிக்க ஓடினான்!

# 4

மறுநாள் பொழுது விடிந்து எட்டு மணியான பிறகும் சபேசனின் அறைக் கதவு திறக்கப்படாமல் சாத்தியே கிடந்தது. பக்கத்து அறைகளிலிருந்த மாணவர்கள் இதையறிந்து ஹாஸ்டல் வார்டனிடம் விஷயத்தைத் தெரிவித்தார்கள். வார்டன் வந்து கதவைத் திறந்து பார்த்தபோது நடனசபேசன் தன் சுய பிரக்ஞையே இல்லாமல், அனலாக வீசும் ஜுரத்தோடு கட்டிலில் படுத்துக் கிடந்தான்!

டாக்டருக்குச் சொல்லியனுப்பப்பட்டது, அவர் வந்தார். பரிசோதனைகள் நடந்தன. 'ஏதோ ஒரு பெரிய அதிர்ச்சியால் இந்த ஜுரம் வந்திருக்கிறது' எனக் கூறி, அவர் தம் சிகிச்சையை ஆரம்பித்தார். என்ன சிகிச்சை செய்தும்

சபேசனுக்கு ஜுரம் தணிவதாயில்லை. ஆனால் முன்போல் பிரக்ஞை அற்றிராமல் கொஞ்சம் சுய உணர்வோடு அவன் இருந்தான்.

இதற்கிடையில் அந்தக் கல்லூரி மாணவ மாணவிகள் அனைவரும் ஒரே விஷயத்தைப் பற்றி வாய் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தார்கள். அதாவது "எதிரே ரெயில் வண்டி வருவது தெரியாமல் பாலத்தின் மேல் நடந்து போய் மல்லிகா ரெயிலில் அறைப்பட்டு இறந்து விட்டாள் !'' என்று.

இந்தச் செய்தி தெரிந்த பின், நடனசபேசனுக்கு வந்திருக்கும் ஜுரத்தைப் பற்றி யாரும் அதியசப்படவில்லை ! அவன் மாரடைப்பால் மாண்டு போகாமல் இருக்கிறானே என்றுதான் அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள் ! இந்த இருவரும் ஒருவரையொருவர் எவ்வளவு சீக்கிரம் எத்தனை புயல் வேகத் தீவிரமாகக் காதலித்தார்கள் ! பாவம், இதற்குள் இந்த இளங் காதலர்களின் முடிவு இப்படியா ஆக வேண்டும் என்று ஒவ்வொருவரும் அனுதாபப்பட்டார்கள். மனம் புழுங்கினார்கள் !

நடனசபேசனின் உடல் நிலை குறித்து சிதம்பரத்திலிருந்த அவன் பெற்றோர்க்கு செய்தி அனுப்பப்பட்டது. அன்று மாலையே அவர்கள் அலறியடித்துக் கொண்டு ஓடி வந்தார்கள். பிள்ளையின் நிலை கண்டு பெற்றோரின் மனம் அனல் பட்ட புழுவாகத் துடித்தது. அன்றே தன் பிள்ளையை ஊருக்குக் கொண்டுபோய்விட ஏற்பாடுகள் செய்தார்கள்.

ஆனால் ?—

நடனசபேசன், தான் இருந்த ஹாஸ்டல் அறையை விட்டு அப்படி இப்படி அசையவே முடியாது என்று முரண்டு பண்ணி மறுத்துவிட்டான். உயிர் போனாலும் இந்த அறையிலேயே போகட்டும் என்று தன் பெற்றோரிடம் சொல்லிவிட்டான்! இதற்கு மேல் அவர்க

ளால் ஒன்றும் செய்ய முடியவில்லை. டாக்டரும், 'அவன் மன அதிர்ச்சி தீரும் வரை இந்த அறை யிலேயே இருப்பது நல்லது' என்று சொல்லி விட்டார்.

ஹாஸ்டல் வார்டன் அநுமதியின் பேரில் தன் பிள்ளை இருக்கும் அறையின் பக்கத்து அறையிலேயே பெற்ருேர் இருந்துக் கொண்டு பணத்தைப் பணம் என்று பாராமல் செல வழித்து சபேசனின் உடல் நிலையைக் குண மாக்க முயன்று கொண்டிருந்தனர்.

மாதம் ஒன்று ஓடி மறைந்தது.சபேசனுக்கு உடல் நிலை குணமாகிவிட்டது. ஆனுல் மன நிலை?

சித்த சுவாதீனமிழந்தவனைப் போல அவன் பேச்சும் செயலும் இருந்து வந்தன. பக லெல்லாம் அமைதியாக—மௌனமாக—படுத் திருப்பான். மாலைப் போது மறைந்து இரவு துவங்கி சரியாக ஏழே முக்கால் மணியா னதும், அந்தப் பாலத்தின் மீது ஏதாவது ஒரு வண்டி புகுந்து ஓடும் சப்தம் கேட்டால் சபே சன் திடீரெனப் படுக்கையைவிட்டுத் துள்ளி யெழுந்து "மல்லிகா!" என அலறியபடியே வெறி பிடித்தவனைப் போல வெளியே ஓடுவான்! எல்லோரும் அவன் பின்னே ஓடிப்போய் அவ னைக் கட்டிப் பிடித்துத் தூக்கிக் கொண்டு வந்து கட்டிலில் படுக்க வைப்பார்கள். உடனே அவனுக்கு ஜுரம் வந்துவிடும். விடிவதற்குள் அந்த ஜுரம் சரியாகிவிடும்! பழையபடி சபேசன் அமைதியாக சுகமாகப் படுத்திருப்பான். மறு படியும் அடுத்த நாள் இரவு ஏழே முக்கால் மணிக்கு, இதே கூச்சல்; இதே ஜுரம்; பிறகு இதே அமைதி !......

இப்படி ஒரு மாதம் சென்று மறைந்தது. கொஞ்சங் கொஞ்சமாக சபேசன் தன் மன நிலை யிலும் குணமாகிக் கொண்டு வந்தான். இப்போ தெல்லாம் இரவு ஏழே முக்கால் மணிக்கு அலறிக் கொண்டு வெளியே ஓடுவதில்லை. அந்த நேரம்

வந்ததும்—பாலத்தின்மேல் வண்டியோடும் அந்த சத்தத்தைக் கேட்டதும்—அமைதியாகக் கண்ணீர் வடிப்பான்! அதோடு சரி. பிறகு எப்போதும் போல சகஜநிலை எய்திவிடுவான்.

டாக்டர் நன்ருகப் பரிசோதித்துவிட்டு 'இனிப் பையனுக்கு ஒன்றுமில்லை' என்று கூறி விட்டார். சபேசனும் கல்லூரிக்குப் போய்வரத் துவங்கினுன். பரீட்சை நாள் நெருங்கிக்கொண்டிருந்தது. சபேசன் படிப்பில் மிகுந்த கவனம் செலுத்திப் படிக்க ஆரம்பித்தான். இதுவரை ஹாஸ்டலிலேயே இருந்துவந்த சபேசனின் பெற்ருேர் மன நிறைவுடன் ஊருக்குப் போய்விட்டார்கள். ஆனுல் வாரத்திற்கு ஒருமுறை வந்து வந்து தம் பிள்ளையைப் பார்த்துப் போய்க் கொண்டிருந்தார்கள்.

திடீரென ஒரு நாள் ஒரு திடுக்கிடும் செய்தி வந்தது. மாண்டுபோன மல்லிகாவை முதலில் காதலித்த அந்தத் தமிழாசிரியர் மாரடைப்பால் செத்துப்போனுராம்!...



அன்ருெரு நாள் மாலை.

தனியாகத் தன் அறையில் உட்கார்ந்து படித்துக்கொண்டிந்த நடனசபேசன் ஏதோ ஒரு புத்தகத்தைத் தேடித் தனது பெட்டியைத் திறந்தபோது, அவன் கண்ணில் அந்த வர்ண ஜெர்ஸி பனியன் தட்டுப்பட்டது. அதைப் பார்த்ததும் அவன் இருதயத்தில் ஏதோ ஒருவித வலி எடுப்பதுபோல் தோன்றியது! வந்த காரியத்தை மறந்துவிட்டு அந்தப் பனியனை எடுத்து மேலும் கீழுமாகத் தூக்கிப் பிடித்துப் பிரித்துப் பார்த்தான். அதில் திட்டுத் திட்டாக இரத்தக் கறைகள் படிந்து அவை அழிந்து காணப் பட்டன!

அந்த இரத்தக் கறைகளையே விழிபுரட்டாமல் வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தான் சபேசன். பலஹீனத்தால் ஒளியிழந்து வெளுத்திருந்த அவன் கண்கள் இந்தக் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் செவ்வரி நாளங்கள் படர்ந்து சிவந்துவிட்டன! எண்ணெய்ப் பசையற்று வெளிறியிருந்த முகம் விகார ரூபம் கொண்டது! திண்மையற்றிருந்த உடல் லேசாக நடுங்கியது. தன்னை மறந்து, தான், இருக்கும் நிலையை மறந்து, உலகத்தையே மறந்து அந்தப் பனியனை உற்றுப் பார்த்துக் கொண்டே இருந்தான்! ......

திடீரென அந்த அறையின் ஒரு மூலையிலிருந்து யாரோ ஒரு பெண் இனிமையாகச் சிரிக்கும் மெல்லொலி எழுந்து கலகலத்தது! நடனசபேசன் சட்டென எழுந்து நின்று கொண்டு, தான் இருந்த அறையைச் சுற்றிப் பார்த்தான்.

என்ன ஆச்சரியம்! அந்த அறையின் சனி மூலையில், உத்திரத்தை ஒட்டினாற்போலிருந்த ஒரு சிறு 'வென்ட் லைட்' ஜன்னலிலிருந்து அழகிய பெண் ஒருத்தியின் தலை மட்டும் அந்தரத்தில் நின்று அவனைப் பார்த்து மையல் ரசம் வழியச் சிரித்துக் கொண்டிருந்தது! அழகாக வாரி விடப்பட்ட இரட்டைப் பின்னலில், அன்று அலர்ந்த முல்லை மலர்ச் சரம் பிறை வடிவில் சொருகப்பட்டிருந்தது! அந்த மலர்ச் சரம் குலுங்கி நெளிய, தலையை மட்டுமே காட்டிக் கொண்டிருந்த அப் பெண், ஒயிலாகச் சிரித்துக் கொண்டிருந்தாள்! இந்தக் காட்சி நிகழ்ந்த அக்கணத்திலிருந்து அவ்வறையில், கிறக்கம் தரும் ஒரு வித சுகந்த மணம் கப்பிக் கொண்டது!

எழுந்து நின்ற நடனசபேசன் ஏதோ ஒரு சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்வதைப் போல, அந்தப் பெண்ணின் தலையையே பரக்க பரக்கப் பார்த்துக் கொண்டிருந்தான்!

சற்று நேரங் கழித்து, ஜன்னலிலிருந்து அந்தப் பெண்ணின் தலை மெள்ள நகர்ந்து அறைக்

கதவுக்கு மேலே போய் நின்றது ! அப்போதும் அது சிரிப்பதை நிறுத்தவில்லை ! சிரித்துக் கொண்டே அவனைக் கண் ஜாடை காட்டி வெளியே அழைத்தது ! 'மெஸ்மரிஸ'த்தால் கவரப்பட்டவன் போல சபேசன் அந்தப் பெண் தலை இருந்த பக்கமே திரும்பி நின்று கொண்டிருந்தான் !

இப்படிச் சிறிது நேரம் கழிந்த பின் சட்டென அந்தத் தலை எங்கோ மாயமாய் மறைந்து விட்டது ! அது மறைந்த அந்த க்ஷணமே தடாலெனத் தலைக் குப்புறக் கீழே விழுந்துவிட்டான் சபேசன் !

அவன் நினைவு நழுவிக் கழன்று ஓடியது !...



"கதை ரொம்பவும் சுவாரஸ்யமாகப் போகிதே !" என்று சொல்லிக்கொண்டே தன் அழகிய உதடுகளைக் குவித்து என் நெற்றியில் முத்தமிட்டது பெண் பேய்!

பேனாவை வைத்துவிட்டு நிமிர்ந்தேன்.

"உங்கள் நெற்றி ஏன் இப்படிக் கொதிக்கிறது ? என் உதடுகள் நெருப்பைத் தீண்டியது போல் எரிகிறதே !" என்று தன் நீலக் குவளை மலர் போன்ற கண்களை அகல விரித்து அதிசயமாகக் கேட்டது பெண் பேய்.

"அதுவா ? அது அப்படித்தான் ! கதை எழுதும்போது என் மூளை உலைக்களமாகிவிடும்! என் மனைவி கூட இப்படித்தான் அடிக்கடி சொல்வாள் !" என்று சிரித்துக் கொண்டே சொன்னேன்.

அந்த ஆண் பேய்கள் வாயை திறக்காமல் முட்டிக் காலைச் சேர்த்துக் கட்டிக் கொண்டு 'உம்'மென்று உட்கார்ந்திருந்தன.

"உங்களுக்கு இந்தக் கதை பிடிக்கவில்லையா? என்று அந்த ஆண் பேய்களைப் பார்த்துக் கேட்டேன்."

"எழுதி முடியுங்கள்! கடைசியாக எங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறோம்!" என்று அந்த இரண்டு பேய்களும் ஒரே குரலில் சொல்லின.

பெண் பேயைப் பார்த்து "காபி!" என்றேன். மேஜைமேலிருந்த பிளாஸ்கை எடுக்காமலே, உயரே கையை நீட்டியது பெண் பேய். அதன் கையில் எங்கிருந்தோ 'டக்'கென ஒரு தங்கக் கோப்பை வந்தது! அது நிறைய ஆவி பறியும் சூடான காபி நுரைத்துத் தளும்பிக் கொண்டிருந்தது!

"இந்தாருங்கள்!"

வியப்புடன் வாங்கிப் பருகினேன். அடடா! அது காபியா? அல்லது தேவாம்ருதமா? கந்தர்வ ரஸம் போன்ற சுவை! என்ன இனிமை! என்ன மணம்!...படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த என் மனைவியை எழுப்பி அவளுக்கும் இந்தக் காப்பியில் கொஞ்சம் கொடுக்க எண்ணினேன்! காபி தான் அவளுக்கு உயிர்! ஒரு கப் காபியைக் கொடுத்துவிட்டு ஒரு டஜன் பிள்ளைகளைப் பெற்றுப் போடச் சொன்னால் கூடப் போட்டுவிடுவாள்! ஆனால், அவளை இப்போது எழுப்பினால் இந்தப் பேய்களைக் கண்டு அலறி ஏழூரை ஒன்றாகக் கூட்டிவிடுவாளே!

தேனைச் சுவைத்த காபியை நான் ஒருவனே தீர்த்துக் கட்டிவிட்டுப் பேனாவைக் கையிலெடுத்தேன். "இனிமேல்தான் கதையில் சூடு பிடிக்கப் போகிறது! கவனமாகப் படித்து வாருங்கள்!" என்றேன்.

பெண் பேய் தன் மேலாக்கைச் சரிசெய்து கொண்டு "சரி! சீக்கிரம் எழுத ஆரம்பியுங்கள்!" என்று செல்லமாகச் சிணுங்கியது.

"பெண் வாசகர்கள் இல்லையென்றால் எழுத்தாளர்கள் பட்டினி கிடந்தே செத்துவிடுவார்கள்!" என்று சொல்லிக் கொண்டே, எழுதத் துவங்கினேன்!...

## 5

சூரியன் சாகப்போகும் நேரம் அது. பன்னிரண்டு மணிநேர அல்ப வாழ்க்கை வாழ்ந்து விட்டு மரண அவஸ்தைப் பட்டுக்கொண்டே மேற்குத் திசை அரக்கன் வெட்டி வைத்திருந்த ஜலக் குழியில் குருதிக் கண்ணீர் வடித்துக் கொண்டே இறங்கிக் கொண்டிருந்தது சூரியன்! அதன் செங்குருதிக் கண்ணீர் செவ்வொளியாய்ப் பரவி உலகத்தைத் திருமஞ்சன மாடவைத்தது.

உலகம் தோன்றிய நாள்முதல் இன்றுவரை அது எத்தனை கோடி ஜன்மங்கள் எடுத்திருக்கிறது! எனினும் அது இன்றைய ஒரு நாள் இறப்புக்காக இரத்தக் கண்ணீர் வடிக்கத்தான் செய்கிறது! இரவு அரக்கனின் பன்னிரண்டு மணிநேர ஆட்சியில் பேச்சு மூச்சின்றிக் கிடந்து விட்டு, நாளை மீண்டும் கீழ்த்திசைக் கன்னியின் கர்ப்பக் கிரகத்திலிருந்து புத்தொளியுடன் புனர் ஜன்மம் எடுத்து இப்புவியில் பிறக்கப்போகிறது. இருந்தாலும், அந்தப் பாதிநாள் மரணத்தைக் கண்டு, நிரந்தர மரணம் எய்தும் மனிதர்களைப் போல சூரியனும் ஏங்கி அழத்தான் செய்கிறது! மரணத் துன்பம் என்றால் பிரபஞ்சங்களுக்கும் அவற்றிலுள்ள ஜீவ ஜட வஸ்துக்களுக்கும் ஒரே வகையான பயம்தானோ?..

நடந்து கொண்டிருந்த நடனசபேசன் திரும்பிப் பார்த்தான். தெருப் புழுதியைக் கூடாரமாக்கிக்கொண்டு மின்னலென அதைத் துளைத்துச் சென்று கொண்டிருந்தது ஒரு கார்.

சபேசனின் கண்கள் அந்தக் காரிலிருந்த இரு மனித உருவங்களைக் கண்டுவிட்டன. சிரித்துக்கொண்டே சிறிது தூரம் நடந்தான் சபேசன். மீண்டும் மற்றொரு கார் அவன் எதிரே வந்துகொண்டிருந்தது. அது முன் சென்ற காரைப் போல அத்தனை வெறி வேகத்துடன் வரவில்லை. மிதமான வேகத்தைக்

காட்டிலும் மிகக் குறைவான வேகத்தில் வந்து கொண்டிருந்தது. அந்தக் கார் அவனைத் தாண்டியபோது, அதனுள்ளிருந்த இரு மனித உருவங்கள் அவனுக்கு நன்ருகத் தெரிந்தன. இப்பொழுதும் அவன் மெல்லச் சிரித்துக்கொண்டே மேலே நடந்தான்.

சபேசனின் இந்தச் சிரிப்புக்குக் காரணம்?

வேகமாகச் சென்ற காரிலேயும் மெதுவாகச் சென்ற காரிலேயும் அமர்ந்திருந்த அந்த நான்கு பேரும் இரு ஜோடிக் காதலர்கள்! காதலர்கள் ஒன்றுகூடிச் செய்யும் காரியங்கள் எதுவாயிருந்தாலும், ஒன்று அளவுக்கு மீறின வேகமுள்ளதாக இருக்கும்; அல்லது அளவுக்குக் குறைந்த தாமதம் கொண்டதாக இருக்கும். காதல் போதையில் இருப்பவர்களுக்குச் சமத்தெளிவு இருக்காதல்லவா? இதை நினைத்துக் கொண்டுதான் சபேசன் அப்படி உள்ளூரச் சிரித்துக் கொண்டான்!...

நடந்துகொண்டிருந்தான் சபேசன். அவன் நடந்து செல்லும் அந்தப் பாதை, வடக்கு முகமாக நெடுநேரே சென்று கொண்டிருந்தது. அவன் அந்தப் பாதையின் தலைப்புறம் வரைக்கும் வந்து விட்டான், திடீரென அப்பாதை திரிசூலத்தைப் போல மூன்று கிளைகளாகப் பிரிய ஆரம்பித்தது. அம்மூன்று சாலைகளில் ஒன்று, ஹைகோர்ட் வரைக்கும் போகிறது; இன்னென்று பூவிருந்தமல்லிக்குச் செல்கிறது; பிறிதொன்று அவ்வூர் மயானத்தின் பிரதான வாயிலண்டை சென்று முடிவடைகிறது!

சபேசன், மயானத்துக்குப் போகும் பாதை வழியே திரும்பி நடக்கலானான்.

சூரியன் துப்புரவாகச் செத்து விட்டான்! கரிய இருள் எங்கும் கனவேகமாகச் சூழ ஆரம்பித்தது.

உலகம் என்பது ஓர் இருட்குகை. அதில் இருள்தான் நிரந்தர வாசம் செய்கிறது. ஒளி

அப்போதைக்கப்போது வந்து போகும் ஒரு விபத்துச் சம்பவம்!.....இப்படி நினைத்துக் கொண்டே சபேசன் நடந்து கொண்டிருந்தான்.

மனித முயற்சி எதுவும் சாஸ்வதமானதல்ல என்பதை நினைப்பூட்டும் வகையில், அந்தச் சாலையிலிருந்த கார்ப்பெரேஷன் விளக்குகள், மின்சாரத் தட்டுப்பாட்டின் காரணமாக ஒன்றுவிட்டு ஒன்று எரிந்துகொண்டிருந்தன.

மயானம் சமீபிக்க இன்னும் ஒன்றரை பர்லாங்கு தூரமே இருந்தது. ஜன நடமாட்டம் முழுதும் அற்று வெறிச் சோடிக் கிடந்தது அந்தப் பிரதேசம். வைர நெஞ்சம் வாய்ந்தவர் கூட இப்போது இந்த இடத்தில் நடந்து செல்லச் சிறிது அச்சமே கொள்வார்கள். அப்படிப் பயங்கர ஏகாந்த வெளியாய் இருந்தது அது!

சபேசன் நடந்துகொண்டிருந்தான். அவனும் மனிதன்தான். ஆயினும் இந்த நிசப்த வெளியில் நடந்து செல்ல அவன் கொஞ்சமும் அஞ்சவே இல்லை. ஏதோ ஒரு வெறியார்வத் துணை கொண்டு சுத்த சித்த வேதாந்தியைப்போல நடந்துகொண்டிருந்தான் அவன்.

காரண காரியம் இல்லாமல் ஒருவன் மயானத்துக்குப் போவதென்றால், அவன் முற்றுந் துறந்த முனிவனாயிருக்கவேண்டும்; அல்லது மூளை பிசகிய பைத்தியக்காரனாயிருக்கவேண்டும். இவ்விரு சாராரும் அல்லாத—ஆனால் இவ்விரு சாராரையும் போன்ற—எழுத்தாளர்களும் சில சமயம் அங்கே போவது உண்டு!

சபேசன் முனிவனோ பித்தனோ பேனாதிபதியோ அல்ல. அவன் சாதாரண ஒரு கல்லூரி மாணவன். இப்படிப்பட்ட ஒருவன்தான் இப்போது இரு கைகளையும் பரக்க வீசி ஒரு மகாஞானியைப் போல மயானத்தை நோக்கி நடந்து கொண்டிருக்கிறான்!

ஏன்?

அவன் ஒரு பெண்ணைக் காதலித்தான். 

அவளும் இவனைக் காதலித்தாள்! ஒருவனும் ஒருத்தியும் காதலித்துக் கொண்டால் மட்டும் போதுமா? உடனே அவர்களின் காதலுக்கு விதி ஒப்புதல் தந்துவிடுமா? விதி, மனிதர்களின் சட்டாம்பிள்ளையாயிற்றே! அதற்குக் கொஞ்ச மாவது மதிப்புக்கொடுக்க வேண்டாமா? சபேச னும் மல்லிகாவும் அந்த விதியைக் கொஞ்சங் கூட மதிக்கவில்லை. இதனால் அதற்கு ரொம்ப வும் கோபம் வந்துவிட்டது! 'விட்டேனா பார்' என்று இவர்களை விரட்டி விரட்டியடித்தது. உலகத்தின் கோடிவரை ஓடினார்கள் ஓடினார்கள். அடிவானத்திற்கு அப்பாலும் புகுந்து ஓடினார் கள். விதி அவர்களை விடவே இல்லை.

இறுதியில் ஒருநாள் அவளை—

மின்சார ரெயில் வண்டி உருவெடுத்து வந்த விதி அவளின் சங்கு நிறக் கழுத்தில் எருக்கம் பூ மாலைச் சூட்டிவிட்டு ஓடியேவிட்டது!

உலகில் நடக்கும் சாதாரண விஷயம் தானே இது? சபேசன் தனி மரமாய் நின்றான். மல்லிகாவின் ஜீவனற்ற பொன்னுடலை, போலீஸார், டாக்டர்கள், பஞ்சாயத்தார்கள் ஆகி யோர் சகலவித பரிசோதனைகளுக்கும் உட் படுத்தி இந்த மயானத்தில் கொண்டுவந்து புதைத்தும் விட்டார்கள்!

மல்லிகா இறந்து இன்றோடு ஏறத்தாழ மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. அவளின் புதை மேட்டை காணத்தான் சபேசன் இப் போது இங்கே நடந்து சென்றுகொண்டிருக் கிறான்!......

சபேசன் நடந்துகொண்டிருந்தான். கூப்பிடு தொலைவில் மயானம் குறுகி வந்து கொண்டிருந் தது. இந்நேரம்வரை எவ்விதச் சிக்கலுமின்றி, எந்தவிதத் தடுமாற்றமும் இன்றி இயங்கிக் கொண்டுவந்த அவன் கால்கள் இப்போது ஏனோ திடீரெனத் தளர்ந்து தடுமாற ஆரம்பித்தன. மயான எல்லையை அவன் இன்னும் மிதிக்க

வில்லை. ஆயினும் அவன் கால்கள் ஒரு பிணத்தின்மீது ஏறி நிற்பதுபோன்ற அருவருப்புத் தளர்ச்சி கொண்டன!

இந்த உலகம் முழுதுமே ஓர் இடுகாடுதான். அதன் ஒவ்வோர் அடி நிலத்திலும் ஒரு மனித உடல் அடக்கமாகியே இருக்கிறது. இவ்வையம் தோன்றியநாள் முதல் இன்றுவரை இதில் பிறந்து மறைந்த மனிதர்கள் எத்தனை எத்தனை கோடிப்பேர்! இந்த எண்ணிக்கைக்கு கணக்கு உண்டா? இல்லை. கடற்கரை மணலுக்காவது ஓர் எண்ணிக்கை கணிக்கலாம். ஆனால் மனித இனம் உண்டான காலத்திலிருந்து இன்றுவரை இதில் ஜனித்து வாழ்ந்து மாண்டுபோன மக்களின் எண்ணிக்கைக்குக் கணக்கே கிடையாது! அந்த எண்ணிக்கையற்ற மாஜி மனிதர்கள், உலகின் ஒவ்வோர் அங்குல நிலத்திலும் அடைந்து அடக்கமாகியே கிடக்கிறார்கள்! பிணவாடை வீசாத ஓர் அங்குல நிலத்தை இம் முழுவலகெங்கனும் காட்டிவிட முடியாது! இவ்வாறிருக்க, ஊர் வேறு, மயானம் வேறு என்று பிரித்துக் கூறுவதில் அர்த்தம் என்ன இருக்க முடியும்? உயிருள்ள மனிதன் நடக்கும் ஒவ்வொரு பாதச் சுவட்டின் கீழும் ஒரு மாண்டுபோன மனிதத் தலை மிதியுண்டு நசுங்குகிறது என்பதை மனிதன் மறக்காமல் இருந்தால்அவன் எவ்வளவோ நல்லவனாக வாழ முற்படுவான்!...

சபேசன் இப்போது இதைத்தான் நினைத்துக்கொண்டான். இந்த நெஞ்சறுக்கும் எண்ணத்தின் காரணமாகத்தான் அவன் கால்கள் இப்போது நிலைதவறித் தளர்ந்து தடுமாற ஆரம்பித்தன.

அன்று அந்தச் சுடுகாட்டுக்கு விடுமுறை நாள்! ஆமாம், ஒரு மனித உடல்கூட அந்தப் புண்ணிய பூமியில் படுக்கை விரிக்க வரவில்லை, அந்த ஊரிலிருந்த அத்தனை மனித உயிர்களும் ஒரு முகமாகச் சேர்ந்து இன்று இந்த

மயானத்துக்கு லீவு விட்டுவிட்டன! இதனால் இந்தச் சுடலையைக் காக்கும் வெட்டியானுக்கு ஏறு மாறான கோபம் வந்துவிட்டிருக்கிறது. அவன் ஒரு பிடி வாய்க்கரிசிக்கும் வக்கில்லாமல் வெறுங் கையோடு பொழுதோடேயே தன் வீட்டுக்குப் போய்விட்டிருக்கிறான்! செத்தவர்கள் தரும் தர்மத்தைக் கொண்டு உயிர்வாழும் அவன் ஏராளமானவர்கள் தினந்தினம் சாக வேண்டு மென எதிர்பார்ப்பதில் கொஞ்சங்கூட தவறே இல்லை!......

கட்டுக் காவலற்றுக் கிடந்த அந்த மயானத் தினுள் சர்வ சுதந்திர புருஷனாக நுழைந்தான் சபேசன்.

நீலவான் படுதாவில் ஒட்டிக்கொண்டிருந்த நித்திலங்களின் சன்னமான ஒளி ரேகைகளைத் துணையாகக்கொண்டு தன் காதலியின் புதைகுழி இருந்த இடத்தை நோக்கி மெள்ள நடந்தான் அவன்.

முதல் ஜாமம் ஆரம்பிப்பதற்குள் மூலைக் கொரு நரியாக நின்று முழக்கமிட ஆரம்பித்து விட்டிருந்தது. விசாலமான நிலப் பரப்பா யிருந்த அந்த மயானத்தில், அங்கொன்றும் இங்கொன்றுமாக ஆண் பனை மரங்களும், வேல மரங்களும் விகாரப் பேய் உருவங்களைப்போல (உங்களை உபமானத்திற்காக இழுத்தது பற்றி மன்னிக்கவும்!) கிளை, இலை, ஓலை வீசிப் பம்மிப் படர்ந்து உயர்ந்து வளர்ந்துவிட்டிருந்தன. அந்த மரப் பொந்துகளில் அஞ்ஞாத வாசம் செய்யும் ஆந்தைகளும் சாக்குருவிகளும் பெருத்த அளவில் குரல் எழுப்பி அலறிக் கொண்டிருந்தன. மறைந்து வாழும் சமூகத் துரோகிகளைப் போல, பகலெல்லாம் மலை இடுக்குகளிலும் மர வளைகளி லும் நுழைந்து தூங்கி வழிந்துகொண்டிருந்த பிணந் தின்னும் கழுகுகளும் ஜாமக் காக்கை களும் கிழத்தனமான நெடுங்குரலில் கூவிக் கொண்டே சிறகுகளை அசைக்காமல் 'ஜிவ் ஜிவ்'

வெனப் பறந்து வந்துகொண்டிருந்தன!......

சபேசன் இவை யொன்றையுமே கவனிக்க வில்லை. மெள்ள மெள்ள நடந்து அவன் காதலி மல்லிகாவின் சமாதியை நெருங்கிக்கொண்டிருந் தான். இப்படி அவன் நடந்து செல்லும்போது அவனின் செருப்பு அணிந்த கால்களுக்குக் கீழே பல மண்டை ஓடுகளும், கன்னச் செதிள்களும், முட்டி எலும்புகளும், விலா எலும்புகளும், இடறி மிதிபட்டு நொறுங்கிக்கொண்டிருந்தன! அந்த மண்டை ஓடுகளுக்கும், விலா எலும்பு களுக்கும் உரிய மனிதர்கள், உயிராய் இருக்கும் போது தங்களை ஒருவன் சுண்டு விரலால் தீண் டக்கூடச் சம்மதித்து இருப்பார்களா?......அப் படிப்பட்டவர்கள் தாம் இப்போது சபேசனின் கால்களுக்குக் கீழே மிதிபட்டு நொறுங்கி 'நசுங் கிக்'கொண்டிருக்கிறார்கள்!...

'தடால்!'—

பெரிய மண்டை ஓடு ஒன்றால் தடுக்கித் தலை குப்புற வீழ்ந்தான் சபேசன்! இப்படித் தன்னை அறியாமல் தடுக்கி வீழ்ந்த வேகத்தில் அவன் சர்வாங்கமும் பூமியில் புரண்டு, அங்கே படிந்து கிடந்த பிணச் சாம்பலை ஏகமாக வாரிப் பூசிக் கொண்டது!

இரு கைகளையும் தரையில் ஊன்றி எழுந்து நிற்க முயன்றான் சபேசன்; முடியவில்லை. நான்கு கால் பாய்ச்சலிலேயே சிறிதுநேரம் நின்று கொண்டிருந்தான். அவனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. நின்ற இடத்திலேயே 'மளுக்'கென உட்கார்ந்துகொண்டான். வலது கையைச் சிரமத்துடன் உயர்த்திக் கண்களில் செருமிக்கொண்டிருந்த பிணச் சாம்பலை நீவி, நிமிண்டி வெளியேற்றிவிட்டு மெள்ள நிமிர்ந்து பார்த்தான்.

என்ன ஆச்சரியம்!

அவன் எதிரே—ஐந்தாறு அடிகளுக்கு அப்பால் இருந்த அவன் காதலி மல்லிகாவின் 

சமாதிக்கு மேலே—அரைவட்ட அளவில் கண்ணைப்பறிக்கும் ஒளிக் கிரணங்கள் விரிந்திருந்தன! அந்த ஒளிப் பிழம்பின் மத்தியிலே—அச் சமாதியின் மேலே—ஓர் அதிரூப லாவண்யமான பெண் அமர்ந்துகொண்டிருந்தாள்! பொன்னிறைத் துகில் போர்த்தியிருந்த அவளின் இடது நெஞ்சுப்புறம் ஒரு விசித்திரமான வாத்தியக் கருவி சாய்ந்திருந்தது! ஒரு முழு மனித எலும்புக் கூட்டை வில்லாக வளைத்து அதில் ஏழு முட்டி நரம்புகளை இழுத்துக் கட்டி, ரோம் நாட்டு மன்னன் நீரோவின் பிடில் வாத்திய கருவி வடிவிலே இருந்தது அது! அதைத் தன் இடது கையிலே அணைத்து வலது கையின் வெண் தந்த விரல்களால் மீட்டிக்கொண்டிருந்தாள் அவள்! ஊனும் உள்ளமும் உருகும் வகையில் மகா ரம்மியமான மெல்லிய நாதம் அதிலிருந்து எழும்பி பனிக் காற்றில் அலையலையாகச் சுருண்டு மிதந்து சென்று கொண்டிருந்தது!...

குத்துக் கண் கொண்டு குறி பிசகாமல் அவளையே பார்த்துக்கொண்டிருந்த சபேசன், திடீரெனப் பயங்கரக் குரலில் "மல்லிகா!..." என்று கண்டம் வெடிப்பதுபோலக் கூவினான்.

அடுத்த கணம்—

அவன் அருகில் இருந்த தும்பைச் செடிப் புதர் ஒன்றிலிருந்து 'புஸ்'ஸெனச் சீறிப் புரண்டு உருண்டு ஓடிவந்த நல்ல பாம்பு ஒன்று, முழ உயரத்துக்கு எம்பிப் படம் விரித்து ஆடி அவன் முதுகைக் கொத்திப் பிடுங்கியது!

"ஹா!...மல்லிகா!..." என்ற அலறல் அவன் வாயைக் கிழித்துக்கொண்டு வெளியேறி அந்த மயானத்தின் அஷ்ட திக்குகளிலும் முட்டி மோதி எதிரொலித்தது!

மல்லிகா சிரித்தாள். சபேசனின் மரண ஓலத்தைக் கேட்டுக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள். இதயத்தைக் கவ்வும் அவளின் இந்த இனிய சிரிப்பொலிக்குத் தகுந்தாற்போல அந்த

எலும்புப் பிடிலிலிருந்து எழும் கந்தர்வ கானம் ஒன்றி ஒலித்தது!

கடல் மீனைப் பிடித்துச் சுடுமணலில் தூக்கி எறிந்தால் அது எப்படித் துள்ளித் துடித்து நெளிந்து வளையுமோ அப்படித் துடித்துக் கொண்டிருந்தான் சபேசன்! ஆலகால விஷ ஏற்றத்தைத் தாளமாட்டாமல் குப்புறக் கவிழ்ந்து கையையும் காலையும் உதைத்து நெம்பி நெளிந்துகொண்டிருந்த சபேசனின் கண் மூக்கு வாய் காது எல்லாவற்றிலும் பிணச் சாம்பலும் இடுகாட்டுப் புழுதியும் ஏகமாக அப்பிச் செருமிக் கொண்டன. கீரைத் தண்டின் அடிப்புற நிறம் போன்ற அவன் உடல் விநாடிக்கு விநாடி கருநீலமாகிக்கொண்டு வந்தது!

இந்த நிலைமையிலும்—

அவன் மெள்ளத் தலைநிமிர்ந்தான். விழியுருண்டைகள் வெளியே வந்து விழுந்துவிடும் வண்ணம் இமைத் தோலை அகலமாக விரித்து அவளைப் பார்த்தான்; ஜோதி மழையில் நனைந்து தோய்ந்து சொகுசாக அமர்ந்திருந்த அந்த மாய மோகினி தன் பவழ வாயைத் திறந்து மென் முறுவல் பூத்தவாறே அவனைப் பட்டும்படாதது மாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். எலும்புச் சிதாரின் என்புருக்கும் கானத்தில் கணத்துக்கு கணம் இனிமை ஏறிக்கொண்டே சென்றது.

வரண்டு வலுவிழந்து உள்ளுக்குச் சுண்டி இழுக்கும் நாவுச் சதையை மிகச் சிரமத்துடன் புரட்டித் திரும்பி "மல்லிகா!" என்று ஹீனஸ் தாயியில் குழறினான் சபேசன்,

இந்தச் சமயத்தில்—

அவனைக் கொத்திப் பிடுங்கிய நல்ல பாம்பு, அந்த மாய மோகினி அமர்ந்திருந்த சமாதியை நோக்கிச் சரேலெனப் பாய்ந்து சென்றது! சாவின் இறுதி வேதனையை அநுபவித்துக் கொண்டே, நெஞ்சுத்தோல் தேய்ந்து விலா எலும்புகள் நொறுங்கி இற்று விழும் வண்

கரமாக மாறுகிறது? கருமேகத்தைப் பழிக்கும் அவளின் சுருள் சுருளான கூந்தல் எங்கே? பிறைநிலா வடிவொத்த பட்டு நெற்றி எங்கே? குவளை மலர்கள் போன்ற கண்கள் எங்கே? இள நுங்கின் முனைபோன்ற மூக்கு எங்கே? செங்கமல மலர் இதழ்போன்ற அதரங்கள் எங்கே? ஸ்படிகப் பழம் போன்ற கன்னங்கள் எங்கே? கண்ணாடித் தண்டுபோன்ற கழுத்து எங்கே? செவ்வாழைக் குருத்து போன்ற கரங்கள் எங்கே? சிவந்த ரோஜா மொக்குகள் போன்ற நெஞ்சகங்கள் எங்கே? உடுக்கை போன்ற இடை எங்கே? உருளும் மத்தளம் போன்ற இடையடிப் புறங்கள் எங்கே? மொத்தத்தில், அந்த அமர ஒளிப் பொற்சிலை எங்கே? எங்கே?......

அவளா இவள்? அந்த அமர அழகுப் பெண்ணா இவள்?—

அளகபாரமற்ற வழுக்கை மண்டை; கருமணியற்ற கண் குழிகள்; கன்னச் சதை இல்லாத தாடை எலும்புகள்; அதரமற்ற வாயில், கோரைப் பற்கள்; மோதிர வளை போன்ற தொண்டைக் குருத்தெலும்புக்குழாய்; நெஞ்சுச் சதைகள் அற்ற விலா எலும்புக்கூடு; தசைப் பசையற்ற கைவெள்ளெலும்புகள்; ஆண், பெண் என்று அறிய முடியாத இடுப்பு எலும்புகள்!......

அப்பப்பா! பயங்கரத் தோற்றம்!

சிறிது நேரத்திற்கு முன்னால் சீரிளமைக் கன்னியாகக் காட்சியளித்தவள் இப்போது ஜீவனை மெல்லும் கிங்கரத் தோற்றம் கொண்டு விட்டிருக்கிறாளே!

அவளைச் சுற்றிக் கோட்டை கட்டிகொண்டிருந்த ஒளிக் கிரணங்கள் இப்போது எங்கோ மாயமாய் மறைந்துவிட்டிருந்தன! சிறிது நேரத்திற்கு முன்னால் அங்கு நாசிக்கு இனிய சுகந்த மணம் வீசிக்கொண்டிருந்தது; ஆனால்

அவன் இரு கரங்களும் ஓய்ந்து துவண்டு கீழே சாய்ந்தன. "மல்லிகா!" என்று ஜீவனற்ற தொனியில் மெல்ல முணகினான். அடுத்த கணம் அவன் முழு உடலும் பனிக் கட்டியைப்போல் ஜில்லிட்டு விறைத்துக் கொண்டது!

சபேசன் செத்துவிட்டான்! செத்துவிட்டானா? குள்ளநரிகளின் கும்மாள ஊளைச் சப்தம் குவலயத்தை அதிர வைத்தது. ஆந்தைகளின் அலறல் ஒலி குடலைப் பிசைந்து பிழிவதாய் இருந்தது. பிணம் தின்னும் கழுகுகளின் ஓலம் அந்தப் பிரதேசத்தையே கிடுகிடுக்க வைத்தது.

பிடில் மீட்டுவதைப் 'பட'டென நிறுத்திவிட்டு நிதானமாகக் குனிந்து, செத்துக் கிடந்த சபேசனின் விஷம் ஏறிய நீல உடலை உற்று நோக்கினாள் அந்தப் பெண். மறுகணம் அவளின் மையல் ரஸம் வழியும் எழில் வதனம், மகா கோரமாக மாறியது. ஒளியுமிழும் அவளின் நீலக் கண்களிலிருந்து ஓங்கார வேகத்துடன் கண்ணீர் பிரளயமாகப் பெருக்கெடுத்து ஓட ஆரம்பித்தது!

அவள் அழுதாள். வாய்விட்டு விம்மி விம்மி அழுதாள். ஈரேழு பிரபஞ்சங்களிலும் உள்ள முழு அவலமும் அவளின் அழு குரலிலே ஒன்றி உறைந்துவிட்டது போலிருந்தது. அவள், இடைவிடாமல் அழுதுகொண்டே இருந்தாள்.

என்ன விந்தை!—

அவள் அழ அழ அவளின் எழில் பொங்கிய திருமேனி கொஞ்சங் கொஞ்சமாகக் கரிக் கட்டையைப்போல் கறுத்துக்கொண்டே வந்தது. சற்றுநேரத்திற்கெல்லாம் அவள் ஒரு நிலக்கரிச் சிலைபோல் நிறம் மாறிவிட்டாள்!

அவள் இன்னும் அழுகையை நிறுத்தவில்லை. செத்துக் கிடக்கும் சபேசனைப் பார்த்துச் செருமிச் செருமி அழுதுகொண்டிருந்தாள்!

ஐயையோ!—

அவள் உருவம் ஏன் இப்படி அதிபயங் 

ணம் அவளை நோக்கித் தரையோடு தரையாக நகர்ந்து சென்றுகொண்டிருந்த சபேசன் இதை எப்படியோ பார்த்துவிட்டான்!

அடுத்த கணம்—

"ஐயோ!... மல்லிகா!... பாம்பு!... பாம்பு!" என்று அண்டம் கிடுகிடுத்துச் சரிந்து சாயும் வகையில் கத்திக் கூவியே விட்டான் சபேசன்.

ஆனால்—

அவள் அவனின் இந்தக் குலைநடுங்கும் கூச்சலைக் கொஞ்சமும் சட்டை செய்யவே இல்லை. அதற்கு மாறாக முன்னிலும் அதிகமாகச் சிரித்துக்கொண்டே பிடிலை மீட்டிக்கொண்டிருந்தாள் அவள்!

அந்தப் பாம்பு?—

அது இப்போது எங்கு சென்று மறைந்ததோ தெரியவில்லை!

அவள் அமர்ந்திருந்த அந்தச் சமாதி அருகில் நெருங்கிவிட்டான் சபேசன். அங்கு அவன் நகர்ந்து வருவதற்குள் நெஞ்செலும்புகள் எல்லாம் தேய்ந்து நொறுங்கிக் குலைக் கொடியில் ஒட்டிக்கொண்டிருந்த இருதய இலைகள் அறுந்து வெளியே வந்து விழுந்துவிட்டன! அவன் இப்போது செங்குருதிப் புனலாடி வந்தவன்போல் காட்சி யளித்தான்!

அவள் பிடிலின் கடைசித் தந்தியை மட்டும் தன் சுட்டு விரலால் மெல்ல வருடிக்கொண்டே அவனைக் குனிந்து நோக்கினாள். அவன் தனது இரு கரங்களையும் மேலே உயர்த்தி அவள் பாதங்களைத் தழுவிக்கொள்ளத் துழாவினான். அவனின் இந்த முயற்சி வெற்றி பெறவில்லை. அவளின் பாதங்கள் எங்கே எதன்மீது பதிந்து இருக்கின்றன என்பது அவனுக்குப் புலப்படவில்லை! ஒளி மண்டலத்தின்மீது உட்கார்ந்திருப்பதுபோல் அவள் காணப்பட்டாள்!

விஷமேறிய சபேசனின் இரத்த நாளங்கள் படீர் படீரென அறுந்து சுருண்டன. உயர்த்திய

இப்போதோ குடற்கொடிகள் அறுந்துபோகும்படியான துர்நாற்றம் எழுந்து அந்தச் சுடுகாட்டையே திணறடிக்க ஆரம்பித்தது!...



உணர்ச்சி வயப்பட்டவனாய் எழுதுவதை நிறுத்திவிட்டு நிமிர்ந்தேன். நிமிர்ந்ததும் என்னையறியாமல் எனது உடல் கிடுகிடுத்துவிட்டது. பயத்தால் நெஞ்சு படபடத்தது.

என் எதிரே உட்கார்ந்திருந்த மூன்று பேய்களும் உண்மையிலேயே அசல் பேய்கள்போல் சர்வ பயங்கர கோர சொரூபங்களாக அமர்ந்திருந்தன. எல்லாம் வெறும் எலும்புக் கூடுகளாக இதயத்தைப் பிழியும் அவலட்சண கோணங்களில் அவை அங்கே உட்கார்ந்திருந்தன!

என் அறையெங்கும் ஒருவித கரிய புகைக் கவிந்து இருந்தது! நாசிக்கு ஒவ்வாத துர்நாற்றம் சுற்றிச் சுழன்றுகொண்டிருந்தது. அறையிலிருந்த நான்கு ஜன்னல்களிலும், எரியும் தீ நாக்குகளின் ஜ்வாலை எட்டி எட்டிச் சுருண்டு மடிந்துகொண்டிருந்தன. எந்த நேரமும் என் வீடு தீப்பிடித்துக் கொள்ளலாம் போன்ற அச்சத்தை அவை உண்டுபண்ணின. மேஜையின் நடுவில், பச்சை மூடியிட்டு எரிந்துகொண்டிருந்த மின்சார விளக்கு, எண்ணெய் அற்ற விளக்குபோல் கொஞ்சங் கொஞ்சமாக இறங்கி ஒளியைச் சுருக்கிக்கொண்டிருந்தது!

"என்ன? இதெல்லாம் என்ன?" என்று நடுங்கிக்கொண்டே எழுந்தேன்.

யாரோ அழும் குரல் கேட்டுச் சுற்று முற்றும் பார்த்தேன். அந்த மூன்று பேய்களும்தான் சிணுங்கிச் சிணுங்கி அழுதுகொண்டிருந்தன! பெண் பேய் பலமாகப் பிரலாபித்தது!

"மனிதர்களைத்தான் நம்ப முடியவில்லை யென்றால் உங்களையும் நம்பமுடியாது போலிருக்கிறதே!" என்று ஆயாசத்துடன் சொன்னேன்.

அம் மூன்று பேய்களும் அழுகையை நிறுத்தின. என்னையே விறைக்கப் பார்த்தன.

"நீங்கள் எழுதுங்கள்! நாங்கள் எதையோ நினைத்துக்கொண்டு அழுதுவிட்டோம்!" என்று பெண் பேய் கர கரத்த குரலில் கூறியது.

"என்னால் இனி எழுத முடியாது! நீங்கள் எழுந்து போகலாம்!'! என்று கோபமாக சீறினேன்.

என் பேய்த்தனமான கூச்சலைச் கேட்டு அந்த மூன்று பேய்களும் பயந்துவிட்டன.

"கோபித்துக் கொள்ளாதீர்கள்! இனிமேல் இப்படிச் செய்யமாட்டோம்!" என்று ஓர் ஆண் பேய் கெஞ்சியது.

"ஆமாம், இனிமேல் இப்படி அழமாட்டோம்!" என்று அழுங்குரலில் சொன்னது பெண் பேய்.

"என் கதை உங்களுக்கு பிடிக்கவில்லையா?"

"ஐயையோ! அதெல்லாம் இல்லை. உங்கள் கதையை ஆழ்ந்து படித்து ரஸித்ததால்தான் இப்படி எங்களை அறியாமல் அழுதுவிட்டோம்! உணர்ச்சியற்ற எங்களையே உணர்ச்சிகொள்ளச் செய்துவிட்டது உங்கள் எழுத்து!"

"பொய்! பொய்!"

"பொய் கூறி ஏமாற்ற எங்களுக்கு அவசியமில்லை. ஏனென்றால் எங்களுக்கு உடல் இல்லை!"

"என் 'மூடு' கலைந்துவிட்டது! இனிமேல் என்னால் எழுத முடியாது!"

அந்த மூன்று பேய்களும் இதைக் கேட்டுச் சிரித்தன. பெண் பேய் மிக இனிமையாகச் சிரித்தது. இப்போது அவை பழைய அழகிய உருவைப் பெற்றன. அறையில் சுகந்தம் மணத்தது. ஜன்னல்களிலிருந்து குளுங் காற்று வீசியது. மேஜை விளக்கு பழையபடி ஒளி உமிழ்ந்

தது. அந்தப் பெண் பேய் எழில் வழியச் சிரித்துக்கொண்டே எழுந்து வந்து என்னை ஆரத் தழுவி முத்தமிட்டது!

"இப்போது 'மூடு' வந்துவிட்டதா?"

தன் உதடுகளைத் துடைத்துக்கொண்டே பெண் பேய் கேட்டது. ஆண் பேய்கள் முறுவலித்தன.

எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. சிரித்தேன். அந்த மாயச் சிகரெட்டும் மாய காபியும் மறுபடியும் கிடைத்தன. என் உடலில் உஷ்ணம் ஏறியது. அது எழுதும்போது ஏற்படும் ஆவேச உஷ்ணம்!

நான் மீண்டும் எழுத ஆரம்பித்தேன்!...

# 6

சில விநாடிகள் தீய்ந்து மாய்ந்தன. மல்லிகா அழுகையை நிறுத்தினுள். மெள்ள எழுந்து நின்ருள். அவளா நின்ருள்? இல்லை; அந்தப் பெண் எலும்புக்கூடு எழுந்து நின்றது. மாஜி மனிதனுக மண்ணில் சாய்ந்து கிடந்த சபேசனின் அருகில் போய் உட்கார்ந்தது. குனிந்து அவன் முகத்தை உற்றுக் கவனித்தது: கவனித்துக்கொண்டே இருந்தது. திடீரெனத் தன் எலும்புக் கைகளைப் பரக்க நீட்டி அவனை அப்படியே வாரியணைத்து தனது நெஞ்செலும்போடு இறுக்கிக்கொண்டு, "அன்பரே! என்னை உங்களுக்குத் தெரியவில்லையா? இதோ பாருங்கள்; உங்கள் உயிர்க் காதலி மல்லிகா என்பவள் நான் தான்! பாருங்கள்! என்னை நன்ருகப் பாருங்கள்!" என்று அவலக்குரலில் அலறிக்கொண்டே அவனின் கறுத்த கன்னங்களில் தன் கோரப் பற்களை வைத்து அழுத்தி அதரபானம் பருகியது, இதனுல் அவனுடைய கருவடைந்த கன்னச் சதைகள் தாறுமாருகப் பிய்ந்து தொங்க ஆரம்பித்தன!

சில நிமிஷங்கள் கடந்தன.

அணைத்திருந்த சபேசனின் பிண உடலைக் கீழே நழுவவிட்டு அங்கிருந்து மெள்ள எழுந்து நின்றுகொண்டு தன் வலது எலும்புக் கையை மட்டும் நீட்டி, அவன் இடது கையைப் பற்றி லாகவமாக மேலே தூக்கியது.

என்ன ஆச்சரியம்!—

சபேசன் தூக்கத்திலிருந்து விழித்து எழுபவனைப்போல சாவதானமாக எழுந்து நின்றான்! ஆனால்?...

அவனைப் போன்ற மற்றோர் உடல் முன்போலப் பிணமாகவே கீழே கிடந்தது! அந்தப் பிண உடலிலிருந்தே இன்னோர் உயிருடல் எழுந்து நின்றது! இப்போது அங்கே இரண்டு சபேசன்கள் இருந்தார்கள்! ஒரு சபேசன் பாம்பு கடித்து அதனால் பிணமாகக் கிடந்தான். இன்னொரு சபேசன் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு எழுந்து நின்றான்!

இப்போது இரண்டாவது தினகரன் எப்படி இருந்தான் தெரியுமா? கோடி மன்மத சொரூபனைக் காட்சியளித்துக் கொண்டிருந்தான்!

அழுதுகொண்டிருந்த அவள் இப்போது அவனைப் பார்த்துச்சிரித்தாள்! குலுங்கக் குலுங்கச் சிரித்தாள்! கும்மாளச் சிரிப்புச் சிரித்தாள்! சிரித்துக்கொண்டே இருந்தாள்!...

மீண்டுமோர் ஆச்சரியம்!

அவளின் ஒவ்வோர் அழகுச் சிரிப்பின்போதும் அவள் அங்கங்களின் ஒவ்வொரு பகுதியும் பழைய எழில் உருவைப் பெற ஆரம்பித்தது! இறுதியாக அவள் சிரித்து ஓய்வதற்கும், முன்னிருந்தபடி முழு எழில் பெறுவதற்கும் சரியாக இருந்தது! இப்போது அவள் ஓர் ஈடிணையற்ற அழகுத் தேவதையாக அவன் அருகில் நின்றுகொண்டிருந்தாள்!

அவன் அவளைப் பார்த்துச் சிரித்தான்; அவள் அவனைப் பார்த்துச் சிரித்தாள்! இருவரும்

ஒருவரை யொருவர் இறுக அணைத்துத் தழுவிக் கொண்டனர்!

அவள் முன்னே நடந்தாள்; அவன் அவளுக்குப் பின்னே சென்றான். பழையபடி அந்தச் சமாதியின்மேல் அவர்கள் இருவரும் நெருங்கி அமர்ந்தனர்!

சமாதியின் மீது அந்த எலும்புப் பிடில் கிடந்தது. அதை அவள் எடுத்துத் தன் தந்த நிற விரல்களால் மீட்ட ஆரம்பித்தாள்!

ஆஹா ஹ்ஹா! இந்தப் புவனமே பாகாய் உருகிப் பெருவெள்ளமாகப் பாய்ந்தோடும் வண்ணம் சுகமான கான அலைகள் கமகமவென எழுந்து பூங்காற்றில் மிதந்து செல்ல ஆரம்பித்தன!

அவள் வெகு நேரம் விடாமல் பிடில் வாசித்துக் கொண்டிருந்தாள். அவன் அந்த இசை வெள்ளத்தில் தன்னை மறந்து மூழ்கிப் போய்க் கொண்டே இருந்தான்!

திடீரென பிடில் கானம் நின்றது. அவன் துடித்துப் பதறி நிமிர்ந்து அவளைப் பார்த்தான்.

அவள் ஒரு மாயப் புன்னகைப் பூத்தவாறே தன் பூப்போன்ற அதரங்களை மெல்லத் திறந்து பேச ஆரம்பித்தாள்: "அன்பரே! அந்தப் பிடில் யாருடைய எலும்புக் கூட்டால் உருவாகி யிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியவில்லையே!"—அவன் முணுமுணுத்தான்.

"தெரியவில்லையா? நீங்கள் ஒரு சரியான பைத்தியம்!...இந்தாருங்கள்! இந்த எலும்புப் பிடிலை உங்கள் கையிலேயே தடவிப் பாருங்கள். அப்போதாவது கண்டு பிடிக்கிறீர்களா பார்க்கலாம் இது யாருடைய எலும்புக் கூடு என்று!" என்று நாணக் கிண்டலுடன் கூறிக் கொண்டே தன் கையிலிருந்த பிடிலை அவனிடம் நீட்டினாள் அவள்.

அவன் அந்தப் பிடிலை வாங்கித் திருப் 

பித் திருப்பித் தடவித் தொட்டுப் பார்த்தான்; மேலுங் கீழுமாகப் புரட்டி உருட்டிப் பரிசோதித்தான். "இது யாருடைய முதுகெலும்பு என்பது அடையாளம் தெரியவில்லையே!" என்று தடுமாறினான்.

அவள் சிரித்துக் கொண்டே அந்தப் பிடியை வாங்கி, அதில் இழுத்துக் கட்டியிருந்த ஏழு ஸ்வர நரம்புகளையும் படீர் படீர் என்று அறுத்து எறிந்தாள்!

அடுத்த கணம்—

பிடில் வடிவில் இருந்த அந்த எலும்புக்கூடு மெள்ள நெளிய ஆரம்பித்தது! நெளிந்து நிமிர்ந்து வளைந்தது! வளைந்து நிமிர்ந்த அந்த எலும்புக்கூடு மின்வெட்டும் நேரத்தில் ஓர் அழகிய வாலிபனாய் அங்கே உருமாறி நின்றுகொண்டது!

மல்லிகா சிரித்தாள்! சபேசன் எல்லையற்ற வியப்பால் அதிர்ந்து "யார் இவன்?" என்று அவளைப் பார்த்துக் குழறிக் கேட்டான்.

"உங்களுக்குத் துப்பறியும் ஞானம் இருந்தால், இவர் யார் என்று கண்டு பிடித்துச் சொல்லுங்களேன் பார்க்கலாம்!" என்று கூறிக் கேலியாகச் சிரித்தாள் அவள்.

சபேசன் அந்த ஆளை உற்றுப் பார்த்தான். அவனை எங்கோ எப்போதோ பார்த்திருப்பது போன்ற நினைவு! ஆனால் அவன் யார் என்று நிச்சயப்படுத்த அவனால் முடியவில்லை. "யார் இவன்?" என்று மீண்டும் கேட்டான்.

அவள் பதில் ஒன்றும் சொல்லாமல் மந்தகாசமாகச் சிரித்தாள். அந்தப் புதிய வாலிபனும் சிரித்தான்.

"யார் இவன்?" என்று ஆத்திரமாகக் கத்தினான் சபேசன்.

இப்போதும் அவள் பதில் சொல்லவில்லை. சிரித்தாள், ஒய்யாரமாக நகைத்தாள். நகைத்துக்கொண்டே எழுந்தாள். அவனை சைகை

காட்டி தன் அருகே அழைத்தாள்.

"யார் இவன்?" என்று மறுபடியும் ஓங்கிக் கதறினான் சபேசன்!......



விரல்கள் வலித்தன. பேனாவைப் 'பொட்' டெனக் கீழே வைத்துவிட்டு நிமிர்ந்தேன்.

"நிறுத்த வேண்டாம்! சீக்கிரம் எழுதுங்கள்! சீக்கிரம் எழுதுங்கள்!" என்று கத்தியது பெண் பேய்.

"சிகரெட்?"

"அதெல்லாம் கிடையாது!"

"காபி?"

"இப்போது ஒன்றும் கொடுக்க முடியாது!"

"அப்படியானால் என்னால் எழுதமுடியாது!"

"எழுத முடியாதா? எழுத மாட்டீர்களா?" என்று அதட்டிக் கேட்டுக்கொண்டே அந்த இரண்டு ஆண் பேய்களும் தங்கள் முஷ்டியை மடக்கிக்கொண்டு என்னை நோக்கி எழுந்து வந்தன!

எனக்குக் குப்பெனக் கோபம் வந்துவிட்டது! "ஏ, பேய்களே! நான் பனங்காட்டு நரி! உங்கள் சலசலப்புக்கு எல்லாம் பயப்படமாட்டேன்! உங்களை விட மோசமான மனிதர்களைக் கண்டே நான் பயப்படுவதில்லையென்றால் நீங்கள் எனக்கு எம்மாத்திரம்? அதட்டி உருட்டி என்னிடம் யாரும் காரியத்தைச் சாதித்துக்கொள்ள முடியாது! கடவுளே வந்து என்னை அதட்டினாலும் அவர் பத்திரமாகத் தம் இருப்பிடம் போய்ச் சேர முடியாமல் பண்ணிவிடுவேன்! தெரியுமா?" என்று சர்வ சினத்துடன் சீறினேன்,

ஆண் பேய்கள் என் சீறலைக் கேட்டு அடங்கி ஒடுங்கி அப்படியே உட்கார்ந்துவிட்டன. பெண் பேய் தன் மேலாக்கை சரியவிட்டவண்ணம் என்னிடம் நெருங்கிவந்து தன் மெல்லிய பூங்கரத்தால் என் கழுத்தைச் சுற்றி வளைத்துக்

கொண்டு "கோபித்துக் கொள்ளாதீர்கள்! உங்கள் குணம் எங்களுக்குத் தெரியும்! சும்மா உங்களைச் சோதித்துப் பார்த்தோம்!...சரி; கதையைத் தொடர்ந்து எழுதுங்கள்! மல்லிகா சபேசனை எங்கே அழைத்தாள்? அந்தப் புது ஆசாமி யார்?" என்று தேன் சொட்டும் குரலில் கேட்டது.

நான் அந்தப் பேய்களின் குறும்புத் தனத்தை எண்ணிச் சிரித்தேன். சிரித்துக் கொண்டே கதையைத் தொடர்ந்து எழுத ஆரம்பித்தேன்!...

## 7

"யார் இவன்? யார் இவன்?" என்று கத்திக்கொண்டே எழுந்தான் சபேசன். வாசல் நிலை தடுக்கிக் கீழே விழுந்த சபேசன் தட்டுத் தடுமாறி எழுந்து நின்றான். இவ்வளவு நேரம் தான் கண்ட காட்சிகள் அனைத்தும் வெறும் கனவுக் காட்சிகளா? என்பதை அவன் நிதானிக்க முயன்றான்! என்ன பயங்கரமான கனவு! பழையபடி தன் சித்தம் கலங்கிவிட்டதோ என்று அவன் சந்தேகப்பட்டான்! இந்த சந்தேகத்தை நிவர்த்திக்கும் சக்தி அவன் மூளைக்கு இப்போது இல்லை. அது அவியலாகக் குழம்பிப் போய்க் கிடப்பதுபோல் இருந்தது!

கண்களை நிமிண்டிக்கொண்டு சுற்று முற்றும் பார்த்தான். அவன் இருந்த அறை கரிய இருளில் அழுந்திக் கிடந்தது. கைகளைத் துழாவிக்கொண்டு போய் விளக்கைப் போட்டான். அறை ஒளி மயமாகியது.

மெள்ள நடந்துபோய் நாற்காலியில் உட்கார்ந்தான். எதிரேயிருந்த மேஜைமேல் அவனுடைய விலையுயர்ந்த கைக் கடிகாரம் மினுக்கிக் கொண்டிருந்தது. அந்தக் கடிகாரத்தில் மணி பார்த்தான். ஏழரை!

எங்கிருந்தோ பக்கமிருந்தோ வந்த ஒரு மின்சார ரெயில் வண்டி அந்தப் பாலத்தின்மேல் ஓடும் சப்தம் நன்ருகக் கேட்டது.

இதுவரை சோர்ந்து குழம்பி உட்கார்ந்திருந்த நடனசபேசன் அந்தச் சப்தத்தைக் கேட்டு சட்டென நிமிர்ந்து உட்கார்ந்தான். பரபரப்புடன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். கீழே சிமினடுத் தரையில் அந்த வர்ண பனியன் கிடந்தது. சடாரென எழுந்து ஓடிப்போய் அதை எடுத்தான். விளக்கு வெளிச்சத்தில் நன்ருகத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். பார்த்துக்கொண்டே இருந்தான்!

திடீரென ஏதோ நினைத்துக் கொண்டவனைப் போலதான் அணிந்திருந்த ஆடைகளை மளமளவெனக் கழற்றி யெறிந்துவிட்டு அந்த வர்ண பனியனை அணிந்துகொண்டான்! அதற்குத் தோதாக எப்போதும் அணியும் வெள்ளை அரை நிஜார் கொக்கியில் மாட்டித் தொங்கிக் கொண்டிருந்தது. அதை வெடுக்கென எடுத்து மின்னல் வேகத்தில் போட்டுக்கொண்டான்! மேஜை மீதிருந்த கடிகாரத்தை எடுத்து மணிக் கட்டில் கட்டிக்கொண்டான்! அறையின் ஒரு மூலையில் நீண்ட நாட்களாக எடுக்காமல் தூசி படிந்து கிடந்தது அவனுடைய ஹாக்கி ஸ்டிக். அதை ஓடிப்போய் எடுத்துக்கொண்டான். இவையெல்லாம் சில விநாடி நேரத்தில் நடந்து முடிந்துவிட்டன.

சுவரை ஒட்டினுற்போலிருந்த ஒரு மேஜை மீது பெரிய நிலைக்கண்ணுடியொன்று இருந்தது. அந்தக் கண்ணுடியின் இடுக்கில், அன்று அவன் பெற்றேரிடமிருந்து வந்த ஒரு கடிதம் செருகி வைக்கப்பட்டிருந்தது. அக் கடிதத்தில் அவர்கள் அன்றிரவு எட்டு மணிக்கு சிதம்பரத்திலிருந்து புறப்பட்டு இங்கு வருவதாக எழுதியிருந்தார்கள். இன்னும் கொஞ்ச நேரத்தில் அவர்கள் இங்கே வந்து சேர்ந்துவிடலாம்!...

நிலைக் கண்ணாடியின் எதிரே வந்து கம்பீரமாக நின்றான் நடனசபேசன். அவன் முகத்தில் இத்தனை நாளும் இல்லாத ஓர் அசாதாரணக் களை ஒளி வீசிக்கொண்டிருந்தது. அவனுடைய மருண்ட பார்வையையும் தெளிவற்ற செய்கையையும் அந்தப் பெரிய கண்ணாடி ஸ்பஷ்டமாகப் பிரதிபலித்துக் காட்டியது. அவன் இப்போது சித்த சுவாதீனம் இழந்துவிட்டவன் போல் காணப்பட்டான்!

ராஜபார்ட் வேஷம் போட்ட புது நடிகனைப் போல, கண்ணாடியில் தன் உருவத்தை ஏற இறங்கப் பார்த்துக்கொண்டான். குபீரென வாய்விட்டுச் சிரித்தான். இடுப்பைப் பிடித்துக் கொண்டு முன்னும் பின்னும் சாய்ந்து வளைந்து சிரித்தான். எத்தனையோ நாட்களுக்குப் பிறகு அவன் இப்போதுதான் இப்படி வயிறு குலுங்கச் சிரித்தான்!

அவனுடைய இந்தச் சிரிப்பொலியோடு இன்னுமொரு சிரிப்புச் சப்தமும் சேர்ந்து கேட்டது! வீணையின் நாதத்துடன் வேணுகானத்தின் ஒலி ஒன்றினாற்போல ஒலித்தன—அவ்விரு சிரிப்பொலிகளும்!

தன் பிம்பத்தைப் பிரதிபலிக்கும் நிலைக்கண்ணாடியை உற்றுப் பார்த்தான் சபேசன். அந்தக் கண்ணாடிக்கு உள்ளே, சற்று நேரத்துக்கு முன்னால் தோன்றி மறைந்த அந்தப்பெண்ணின் தலை மட்டும் தெரிந்தது! அதுதான் இப்போது அவனுடன் சேர்ந்து சிரித்துக்கொண்டிருந்தது!

“வந்து விட்டாயா மல்லிகா? இப்போது உன்னைப் பார்க்கத்தான் நான் இதோ கிளம்பிக் கொண்டிருக்கிறேன்! நீ என்னை வரச் சொல்லி முன்பு எழுதிய கடிதம்கூட இன்னும் என்னிடம் இருக்கிறது! எனக்கும் உனக்கும் பிடித்த உடைகளை இதோ உடுத்திக்கொண்டேன்! வருகிறேன் மல்லிகா, வருகிறேன்!” என்று வாத்ஸல்யத்துடன் அந்தத் தலையைப் பார்த்துக்

கொண்டு சொன்னுன் சபேசன். அவன் பேசிய இந்த வார்த்தைகள் ஒலி வடிவம் பெற்றனவா இல்லையா என்பது அவனுக்கே சந்தேகமாக இருந்தது! ஆனுல் அவன் வாயைமட்டும் நன்ருக அசைத்தான்!.....

"போகலாமா கண்ணே?" என்று மீண்டும் கேட்டான் சபேசன். கண்ணுடியிலிருந்த அந்தப் பெண்ணின் தலை அங்கிருந்து மெள்ள நகர்ந்து அறைக் கதவுக்கு மேலே போய் நின்று அவனைப் போதையுடன் பார்த்துக் கண்களைச் சிமிட்டி அழைத்தது! மகிழ்ச்சியுடன் அறைக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தான் சபேசன்.

அந்தத் தலை அந்தரத்தில் நின்றவாறு அவனுக்கு முன்னே சென்றுகொண்டிருந்தது! அதைப் பின் தொடர்ந்து வேகமாக நடந்தான் நடனசபேசன்!

ரெயில்வே பாலத்தின் கீழே அவன் வந்து நிற்பதற்கும் பாலத்தின்மேல் முனையிலிருந்த சிக்னல் கம்பத்தில் சிவப்பு விளக்கு அணைந்து பச்சை விளக்கு எரிவதற்கும் சரியாக இருந்தது. அதைத் தொடர்ந்து 'லெவல் கிராஸிங்'கிலிருந்து மணியடிக்கும் சப்தம் கேட்டது!

கைக் கடியாரத்தில் மணி பார்த்தான் சபேசன். சரியாக மணி ஏழே முக்கால்!

அந்தரத்தில் நகர்ந்து சென்றுகொண்டிருந்த அந்தப் பெண்ணின் தலை சட்டென மறைந்தது; அதையே பார்த்துக்கொண்டிருந்த நடனசபேசன் கண்டம் வெடித்துவிடுவதுபோல "மல்லிகா!" என்று கத்தினுன்.

அடுத்த விநாடி ஓர் அதிரூப லாவண்யமான பெண் பாலத்தின் மேலே—தண்டவாளத்தின் மத்தியில் நின்றுகொண்டிருந்தாள்! அவள் அவனைக் குனிந்து பார்த்து இரு கைகளையும் நீட்டி, மேலே வரும்படி சைகை செய்தாள்! இந்தச் சமயம் எங்கிருந்தோ செங்குத்தான ஓர் ஒளிக்கற்றை பாலத்தின்மேல் பாய்ந்து 

பதிந்தது!..... வர வர அந்த ஒளி பெரிதாகிக் கொண்டே போயிற்று !...

கீழே, அந்தப் பாறையின் அருகில் நின்று அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த சபேசன் "மல்லிகா!" எனக் கதறிக்கொண்டே ஆற்றின் சரிவுச் சுவர்ப் பக்கம் தாவியேறிப் பாலத்தை நோக்கி ஓடினான்!

அடுத்த கணம்—

'தடதட...' வென்ற பேரொலியோடு ஒரு மின்சார ரெயில்வண்டி அந்தப் பாலத்தின் மேல் பாய்ந்து புகுந்து ஓடியது!...

அதே சமயம், பாலத்தின் கீழேயிருந்து "சபேசா!" என்ற இரு அலறல் ஒலிகள் ஒன்றாக எழுந்து அந்த பிரதேசத்தையே அதிர வைத்தன!

வண்டி பாலத்தைக் கடப்பதற்குள் ஏதோ ஓர் உருண்டையான பொருள் ஆற்றின் கீழே கும்பலாக நின்று கொண்டிருந்த கல்லூரி மாணவர்கள், சிதம்பரத்திலிருந்து இப்போது தான் வந்து சேர்ந்த சபேசனின் பெற்றோர்கள்—இவர்கள் மத்தியில் வந்து விழுந்தது! அதைத் தொடர்ந்து நீளமான மற்றொரு பொருளும் 'தொப்'பெனக் கீழே சரிந்தது!

சபேசனின் தாய், கீழே விழுந்த அந்த உருண்டையான பொருளை ஓடிப்போய்த் தூக்கிப் பார்த்தாள்.

அந்தப் 'பொருள்'?—

அவள் பத்து மாதம் சுமந்து பெற்ற மகனின் தலை! ரெயில் வண்டிச் சக்கரங்களால் வெட்டுப் பட்ட சபேசனின் தலை!!...

எங்கிருந்தோ ஒரு பெண்ணும் இரு வாலிபர்களும் சேர்ந்து சிரிக்கும் ஒலி காற்றில் மிதந்து வந்து ககனத்தில் பரவி மறைந்தது!



உற்சாகமாகத் தலை நிமிர்ந்து பேய்களைப் பார்த்தேன். அவை மூன்றும் தலையைத் தொங்

கப் போட்டுக்கொண்டு ஏதோ ஆழ்ந்த யோசனை யில் மூழ்கியிருந்தன.

மெல்லக் கனைத்தேன். பேய்கள் நிமிரவில்லை.

"ஆகட்டும்! ஆகட்டும்!" என்று ஓர் ஆண் பேய் தலை குனிந்து கொண்டே சொன்னது. பெண் பேயின் முகத்தைப் பார்க்க முடியவில்லை. அது தன் முகத்தை முட்டிக்கால் இடுக்கில் நன்ருகப் புதைத்துக் கொண்டிருந்தது.

பெருமூச்சு விட்டவாறே நான் மீண்டும் எழுதத் துவங்கினேன்!...

## 8

மல்லிகாவுக்குப் பரம சந்தோஷம். தன் ஆருயிர் காதலன் நடன சபேசன் பூவுலகப் புன்மை உடல் நீத்து, தன்னைப்போல் ஆவியுலக வாசியாய் ஆனது பற்றி அவளுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி!

அவனும் அவளும் அந்த ரெயில்வே பாலத்தைவிட்டு விண்ணின் மேலேறி வேகமாகப் பறந்துசென்றனர். அவர்களின் பின்னே மற்ருேர் ஆண் ஆவியும் தொடர்ந்து பறந்து சென்றது. நடனசபேசன் தன் அறையில் தடுக்கி வீழ்ந்து நினைவிழந்தபோது அவன் கண்ட மயான கனவுக் காட்சியில், மல்லிகாவின் எலும்புச் சிதாரிலிருந்து எழுந்து வந்தானே ஓர் ஆடவன்; அவன் தான்—அந்த ஆவியுலக மனிதன்தான்— இப்போது அவர்கள் பின்னே பறந்து கொண்டிருந்தான்!

உலகெலாம் சுற்றிப் பறந்து ஓய்ந்து விட்டார்கள் அவர்கள்! சோர்வுடன் அந்தச் சுடுகாட்டுச் சமாதியண்டை வந்தபோது, சரியாக இரவு மணி பன்னிரண்டு!

மல்லிகாவின் சமாதியருகே மற்ருெரு புதிய சமாதி இப்போது எழும்பி நின்றது. அந்தச் சமாதியருகில் வயது முதிர்ந்த ஓர் அம்மை 

யாரும் ஒரு பெரியவரும் அமர்ந்து மௌனமாகக் கண்ணீர் வடித்து கொண்டிருந்தனர். சுடுகாட்டு வெட்டியான் அவர்களை அங்கிருந்து வெளியே றச் சொல்லியும் அதை அவர்கள் காதில் வாங்கிக் கொள்ளாமல் பொருமிப் பொருமி அழுது கொண்டிருந்தனர்!

"மல்லிகா! அதோ பார்த்தாயா? என் அருமைப் பெற்றோர் என்னைப் புதைத்த இடத்தில் உட்கார்ந்து அழுது கொண்டிருக்கிறார்கள்! பாவம், அவர்கள் என்னைப் பெற்று வளர்த்ததால் இந்த அழுகைதான் அவர்களுக்குப் பலனாக மிஞ்சியிருக்கிறது!" என்றான் சபேசன் சர்வ சோகக் குரலில்.

"ஆமாம்! என் பெற்றோர்கூட நான் இறந்த போது இங்கே, இந்தச் சமாதி யண்டை வந்து இப்படித்தான் தினமும் ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தார்கள்! ஆனால் இப்போது அவர்கள் இங்கே வருவதில்லை. மறந்து விட்டிருப்பார்கள்!" என்றாள் மல்லிகா. அவளுடைய குரலிலும் சோகம் ததும்பி வழிந்தது.

"அந்த ஆசாமியின் சமாதி எங்கே?" என்று கேட்டான் சபேசன்.

மல்லிகா இதற்குப் பதில் சொல்லவில்லை. சற்றுத் தொலைவில், ஏதோ ஒரு சமாதியின்மேல் உட்கார்ந்து என்னமோ ஒரு தமிழ் இலக்கணப் புத்தகத்தை வைத்துப் படித்துக் கொண்டிருந்த அந்த ஆடவன்—அதாவது: எலும்புப் பிடியிலிருந்து உயிர்த்த மனிதன்—தலை நிமிர்ந்து, "எனக்குச் சமாதி இல்லை! எங்கள் குல வழக்கப்படி என் உடலை எரித்துச் சாம்பலாக்கிவிட்டார்கள்! என்னுடைய மனைவி இப்போது எனது சகோதரன் ஒருவனின் பாதுகாப்பில் இருக்கிறாள்! ஆதலால் என்னைப் பற்றி நினைக்க எங்கள் குடும்பத்தில் யாருமே இல்லை!" என்றான். அவன் தொண்டை கம்மிக் கரகரத்தது.

சற்றுநேரம் அவர்களிடையே மௌனம்

நிலவியது. சபேசன் மீண்டும் பேசினன்: "மல்லிகா! நீ எப்படி அந்த மின்சார ரெயிலால் அறையுண்டு இறந்தாய்?"

"அந்த விஷயம் உங்களுக்குத் தெரியாதா? அதை நினைத்தாலே என் நெஞ்சு நெருப்பாக எரிகிறது. அன்று மாலை உங்களை அந்தப் பாலத் தண்டை வரச் சொல்லிக் கடிதம் எழுதியிருந் தேனல்லவா? என் ஹாஸ்டலிலிருந்து சரியான நேரத்தில்தான் உங்களைச் சந்திக்கப் புறப்பட் டேன். ஏழு மணிக்கெல்லாம் நன்முக இருட்டி விட்டதால், அந்த ஆற்ருேரமாக நடந்து வர எனக்குச் சற்று பயமாக இருந்தது. ஆதலால் ரெயில் தண்டவாள மேட்டுப் பாதையின்மேல் ஏறி வேகமாக வந்து கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில், பாலத்தின் இடது புறமிருக்கும் மயானத்திலிருந்து யாரோ என் பெயரைச் சொல்லி அழைக்கும் குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். சுடுகாட்டு வேலியோரமிருந்து ஓர் உருவம் என்னை நோக்கி வேகமாக வந்தது. நான் அந்த உருவைப் பார்த்துப் பயந்து விட்டேன். ஏதாவது பேயாய் இருக்குமோ, அல்லது எவனுவது வழிபறிக்காரனு யிருப்பானே, அல்லது நான் உங்களைச் சந்திக்க வரும் விஷயம் தெரிந்த நம் கல்லூரி மாணவன் எவனுவது வந்து என்னை இடைமறித்து இழுத்துப் போகத் திட்டமிட்டி ருக்கிருனே என்றெல்லாம் எண்ணி நடுங்கி விட் டேன்! உங்களைக் கத்திக் கூப்பிட வாய்திறக் தேன். ஆனல் என் தொண்டையிலிருந்து அப் போது ஒலியெழும்பவில்லை. பயத்தால் ஏற் பட்ட நடுக்கத்துடன் கண்மூக்குத் தெரியாமல் பாலத்தை நோக்கி ஓட ஆரம்பித்தேன். அப் போது எதிரே ஒரு வண்டி வந்துக்கொண்டிருந் தது. திரும்பிப் பார்த்தேன். அந்த உருவம் என் அருகே மிக மிக நெருங்கி வந்துவிட்டது; எனக்கு என்ன செய்வதென்றே தெரிய வில்லை. இருட்டில் நீங்கள் நின்று கொண்டி

ருந்த இடமும் எனக்குத் தெரியவில்லை. எதிரே வண்டி நெருங்கி வந்து விட்டது. அதன் விளக்கு வெளிச்சம் என் கண்ணைப் பறித்தது. அது வருவதற்குள் பாலத்தின்மேல் நடந்து ஓடி, கீழே இறங்கிவிடலாம் என்று எண்ணி பாலத்தின் குறுக்குக் கட்டைகளின்மீது தாவிக் குதித்து வேகமாக நடந்தேன். கீழே கிடுகிடு பாதாளத்தில் இருள் மண்டிக் கிடந்தது. சாதாரண சமயமாயிருந்தால் நிச்சயமாக அந்தப் பாலத்தின்மேல் ஏறியிருக்க மாட்டேன். பகல் நேரத்திலேயே நான் அந்தப் பாலத்தின்மேல் நடந்து கடந்ததில்லை. பின்னால் என்னைத் தொடர்ந்து யாரோவரும் பயக்குழப்பத்தில்தான் அப்படி முன்பின் யோசியாமல் துணிந்து ஏறி விட்டேன்! பாதி பாலத்தைக் கடப்பதற்குள், எதிரே வந்த வண்டி பாலத்தின் முனையைத் தொட்டுவிட்டது! நான் அப்படியே திகைத்து நின்றேன். உங்கள் பெயரை ஓங்கி அழைத்துக் கூவினேன். பிறகு அந்த ஒரு விநாடி என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது! ஏதோ ஒரு கட்டிலிருந்து அவிழ்த்துவிட்டவள்போல் ''ஜிவ்'வென்று விண்ணில் பறந்தேன்! மேக மண்டலங்களையெல்லாம் கடந்து, தூரிய வெளிகளையெல்லாம் தாண்டி. மேலே மேலே மேலே பறந்து சென்று கொண்டே இருந்தேன்! கோடானுகோடி ஆண்டுகளாக நான் அப்படிப் பறந்துகொண்டே இருப்பது போன்ற ஒரு பிரமை தட்டியது. ஆனால் எந்தவித சோர்வோ சிரமமோ இன்றி, சர்வசுகானந்தமாகப் பறந்து கொண்டிருந்தேன். அப்புறம் என்ன நடந்து இருக்கும் என்பது உங்களுக்கும் தெரியும். ஏனென்றால், நீங்களும் சற்று நேரத்திற்கெல்லாம் அங்கெல்லாம் போய் அவற்றையெல்லாம் பார்த்துவிட்டுத்தானே திரும்பி வந்திருக்கிறீர்கள்!......'' என்று தன் நீண்ட பேச்சை நிறுத்தினாள் மல்லிகா.

"ஆமாம், அதெல்லாம் எனக்குத் தெரியும். நமக்கு அங்கே இப்போது இடம் இல்லையாம். இன்னும் கொஞ்ச காலம் நாம் இந்த உலகத்தில் இப்படியே சுற்றிக்கொண்டுதான் இருக்க வேண்டுமாம்! பிறகு அந்த நேரம் வந்ததும் அவர்களெல்லாம் வந்து நம்மை அங்கே அழைத்துக்கொண்டு போய்விடுவார்களாம்!... அது சரி: அன்று இரவு அந்தச் சுடுகாட்டு வேலியோரமிருந்து உன்னைப் பின் தொடர்ந்து வந்த ஆசாமி யார்? அதைச் சொல்லவில்லையே!" என்று கேட்டான் சபேசன்.

மல்லிகா இதற்குப் பதில் சொல்லவில்லை. மௌனமாகத் தலைகுனிந்து மென்முறுவல் பூத்தாள்.

"சொல்ல மாட்டாயா?" என்று மீண்டும் கேட்டான் சபேசன்.

இதுவரை ஏதோ படித்துக்கொண்டிருந்த அந்த மூன்றாவது ஆசாமி, புத்தகத்தை மூடிவிட்டுத் தலைநிமிர்ந்து "அஃதை யான் செப்புகின்றேன்!" என்று இலக்கணச் சுத்தமாகச் சொன்னான்.

"உனக்குத் தெரியுமா!" என்று வியப்புடன் கேட்டான் சபேசன்.

"ஆம்; எனக்குத் தெரியும்! அன்று மல்லிகாவைப் பின்தொடர்ந்து வந்தது யானேதான்!" என்று அமைதியாகச் சொன்னான் அந்த ஆசாமி.

"என்ன! நீயா?" என்று ஆத்திர ஆவேசத்துடன் கத்தி, "என் அருமைக் காதலி மல்லிகா ரெயிலில் அறைபட்டு உயிர் துறக்க நீதான் காரணமா?" என்று சினத்துடன் பாய்ந்து அவன் கழுத்தைப் பிடித்து நெரிக்க ஓடினான் சபேசன்.

அடுத்த கணம் அந்த ஆசாமி அங்கிருந்து மறைந்தான். மல்லிகா சிரித்தாள். அவள் கையில் இப்போது அந்த எலும்புக் கூட்டுப்

பிடில் இருந்தது. அதன் அறுந்த ஸ்வரத் தந்தி களை இழுத்துக் கட்டி மீட்ட ஆரம்பித்தாள்!

இதயம் இன்ப வாரிதியில் அமிழ்ந்து மிதந்து போகத் தக்க விதமாக இனிய கானம் எழுந்து காற்றில் அலையலையாகச் சுருண்டு சென்றது!

ஏதோ ஒரு காந்தக் கவர்ச்சியால் கவரப் பட்டவன்போல சபேசன் திரும்பி வந்து மல்லிகா வின் காலடியில் அமர்ந்தான்! அவள் உல்லாசப் புன்னகையுடன் கானமண்டலத்தைக் கட்டி எழுப்பிக்கொண்டே சென்றாள்! எங்கும் சுகந்த மணமும் சுகமான கீத ஓசையும் சுற்றிச் சுழன்று ரீங்கரித்துச் சென்றன! . . .

அவள் பிடில் மீட்டுவதை நிறுத்தினாள்.

"அவன் யார் மல்லிகா?" என்று கத்திக் கேட்டான் சபேசன்.

"அவரா? அவர் என் காதலர்!" என்றாள் மல்லிகா சிரித்துக்கொண்டே.

"காதலனா! அவன் உன் காதலனா?"

"ஆமாம், அவர் என் காதலர்தான்!"

"அப்படியானால் நான்?"

"நீங்கள் என் இரண்டாவது காதலர்! அவர் என் முதல் காதலர்!"

"மல்லிகா!"

"அவசரப்படாதீர்கள்!"

"என்ன?"

"உண்மைதான்!"

"துரோகி!" என்று கூவிக்கொண்டே குபீ ரெனப் பாய்ந்து அவள் கையிலிருந்த பிடிலைப் பிடுங்கித் தூர வீசியெறிந்தான் சபேசன்.

அடுத்தகணம்—

அந்தப் பிடிலின் தந்திகள் படாரென்று அறுந்தன. அந்த எலும்புக்கூடு நெளிந்தது! அதிலிருந்த அந்த ஆசாமி எழுந்து வந்தான்!...

"நீ என்னை ஏமாற்றிவிட்டாய் மல்லிகா! என் மனித வாழ்க்கையையே சூறையாடிவிட்

டாய் மல்லிகா! உன்னை, உன் காதலை நம்பி, உனக்காகவே என் உடலை நீத்து, இந்த ஆவி ரூபத்திலாவது உன்னை அணைத்து மகிழலாம் என்ற அடங்கா வேட்கையுடன் வந்தேன்! ஆனால்...ஆனால்...என்னை மோசம் செய்து விட்டாய்!...எனக்குத் துரோகம் இழைத்து விட்டாய்!'' என்று அலறினான் சபேசன்.

மல்லிகா ஒன்றும் பேசவில்லை. அவள் எப்போதும் போலச் சிரித்துக்கொண்டுதான் இருந்தாள்!

''நீ பதில் சொல்ல மாட்டாயா?'' என்று மீண்டும் கர்ஜித்தான் சபேசன்.

''நான் சொல்வதற்குள்தான் நீங்கள் அவசரப்பட்டுக் கோபிக்கிறீர்களே! நான் எப்படிச் சொல்வது?'' என்று நிதானமாகக் கேட்டுவிட்டு மீண்டும் சிரித்தாள் மல்லிகா.

''சரி. சீக்கிரம் சொல்! கதை அளக்க வேண்டாம்!'' என்று வெறுப்புடன் முணு முணுத்தான் சபேசன்.

''நாம் மூவரும் பூலோகத்தில் மனிதர்களாக வாழ்ந்தபோது.....என்னைப் பலபேர் காதலித்தார்கள். அவர்களுள் இந்த ஆசாமியும் ஒருவர். நான் உங்களைக் காதலித்தேன். நீங்களும் என்னைக் காதலித்தீர்கள். அதன் பரிபூர்ண சுகத்தை அநுபவிப்பதற்குள் நான் இந்த ஆவியுலகத்துக்கு வந்துவிட்டேன்! என்னைத் தேடிக் கொண்டு நீங்களும் இங்கே வந்துவிடுவீர்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனால் நீங்கள் வருவதற்குமுன் அந்த ஆசாமி இங்கே என்னைத் தேடி வந்துவிட்டான்! உண்மையை மறைக்காமல் சொல்ல வேண்டுமென்றால், உங்களைவிட அந்த ஆசாமிதான் என்னை ஆயிரம் மடங்கு அதிகமாகக் காதலிக்கிறான் என்பது இதன்மூலம் தெளிவாயிற்று எனக்கு! எனவே, மனித உலகில் காதலிக்காத அவனை இந்த ஆவியுலகில் காதலிக்கத் துவங்கினேன்! பிறகுதான் நீங்கள் 

இப்போது வந்திருக்கிறீர்கள்! என்ன இருந்தாலும் நீங்கள் எனக்கு இப்போது இரண்டாவது காதலர்தான்! முதல் காதலராக அவரைத் தவிர வேறு யாரையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது! அவர்தான் என்னை, அந்த உலகத்திலும் காதலித்தார்; இந்த உலகத்திலும் காதலிக்கத் தன் இன்னுயிரை நீத்து இங்கே முதலில் ஓடி வந்துவிட்டிருக்கிறார்!...''

அவள் குரலில் தெளிவு இருந்தது; சற்றே அதில் ஆத்திரமும் இருந்தது.

சபேசன் மல்லிகாவை உற்றுப் பார்த்தான். பரிதாபமாக அவளை ஏறிட்டுப் பார்த்தான்: "அப்படியானால் என்னுடைய காதல் இரண்டாந்தரம் என்று சொல்கிறாய்?'' என்று வேதனையுடன் கேட்டான்.

"அப்படி நான் சொல்லவில்லை. ஆனால் அப்படித்தான் இருக்கிறது!'' என்றாள் மல்லிகா.

அவன் பதில் சொல்லாமல் சிறிதுநேரம் மௌனமாயிருந்தான். பிறகு "அந்த ஆசாமி யார்?'' என்று கேட்டான்.

"அதை நான் சொல்லமாட்டேன்!'' என்று நகைத்தாள் மல்லிகா.

சபேசன் சட்டென அங்கிருந்து எழுந்தான். கோபமாக எங்கோ போவதுபோலச் சற்று தூரம் போய், மறுபடியும் திரும்பி வந்தான். மல்லிகாவின் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு "நான் உன்னை மனப்பூர்வமாகக் காதலித்தேன். இப்போதும் காதலிக்கிறேன். ஆனால் என்னுடைய ஸ்தானத்தில் இன்னொருவன் உன் இதயத்தில் இடம் பெற்றிருப்பதை என்னால் சகிக்க முடியவில்லை! மனித ஜன்மத்தில் நானும் அவனும் இருந்திருந்தால் இந்நேரம் அவனைக் கத்தியால் குத்திக் கொலை செய்துவிடுவேன்! ஆனால் அந்தமாதிரிச் செயலை இந்த ஆவியுலகப் பிறவியில் செய்ய முடியாது! எனவே, அவனை உன்னிடமிருந்து பிரிக்க நீதான் எனக்கு ஒரு

வழி சொல்லித்தரவேண்டும்! அது எவ்வளவு பெரிய கஷ்ட காரியமாயிருந்தாலும் செய்து முடித்து, உன்னை நான்ஒருவனே அடைய முயற்சிப்பேன்! இப்போதே, இந்த கணமே முயற்சிப்பேன்!" என்ருன் ஆவேச வெறியுடன்.

மல்லிகா சிரித்தாள். சிரித்துக்கொண்டே சொன்னுள்: "அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது!"

"சொல் மல்லிகா! சீக்கிரம் அதைச் சொல்?" என்று துடிப்புடன் கேட்டான் சபேசன்.

"அந்த ஆசாமியின் மனைவி, இன்னும் பூலோகத்தில் மனித உடலோடு இருக்கிருள். ஆனந்தமாக நாட்களைக் கழிக்கிருள். இந்த ஆசாமியின் அண்ணனெருவனின் அந்தரங்கக் காதலியாக அவள் இருந்து வருகிருள்! அவளை எப்படியும் இந்த ஆவியுலகத்தில் கொண்டு வந்து சேர்த்துவிட்டால், உங்கள் ஆசை நிறைவேறும்!"

"அது எப்படி?"

"அவள் ஒரு காம ராட்சஸி! சித்தினி ஜாதிப் பெண்! அவளை மனித உடலை நீக்கச் செய்து, ஆவியுலகப் பிறவி எடுக்கச் செய்துவிட்டால், அவள் இங்கே வந்தும் தன் கணவனை விடாமல் விரட்ட ஆரம்பிப்பாள்! அவளுக்குப் பயந்து அவன் இந்த ஈரேழு உலகமும் சுற்றிச் சுற்றி ஓடிக்கொண்டே இருப்பான்? அவளும் ஓயாது விரட்டுவாள்! அவனும் சளைக்காமல் ஓடிக்கொண்டிருப்பான்! அதன்பின், நாம் இருவரும் நிம்மதியாக......உல்லாசமாக......"

"ஆகா! அருமையான யோசனை! அப்படியே செய்கிறேன்!" என்று உற்சாகமாகக் கத்திக்கொண்டே காற்ருய்க் கடுகி ஓடி மறைந்தான் சபேசன்.

இதுவரை தொலைவில் உட்கார்ந்து 'சதுர் அகராதி'யைப் புரட்டிக்கொண்டிருந்த அந்த ஆசாமி மெள்ள எழுந்து மல்லிகாவை நோக் 

கி வந்தான். மல்லிகா அவனைப் பார்த்து ஆவலுடன் கரங்களை நீட்டினாள். அடுத்த கணம் அவளின் ஆழ்ந்த அரவணைப்பில் அவன் மெய்ம் மறந்தான்!......



"நிறுத்த வேண்டாம்! நிறுத்த வேண்டாம்!" என்று கத்தியது பெண் பேய்.

"சிகரெட் தருகிறோம்; காபி தருகிறோம்! சீக்கிரம் எழுதி முடியுங்கள்!" என்று துரிதப் படுத்தின அந்த ஆண் பேய்கள்.

"அதெல்லாம் முடியாது! என் கையும் மூளையும் சோர்ந்துவிட்டன. தூக்கம் வேறு வருகிறது! மீதத்தை நாளை இரவு எழுதி முடிக்கிறேன்!" என்று சொல்லிக்கொண்டே எழுந்தேன்.

"இது ஒரு சரியான செமிக்கிராக்!" என்று முணகிக்கொண்டே அந்த மூன்று பேய்களும் எழுந்து வெளியே ஓடிவிட்டன.

நான் என் மனைவியை எழுப்பினேன். அவள் நான் 'எதற்கோ' எழுப்புகிறேன் என்று சலிப்புடன் திரும்பிப் படுத்துக்கொண்டாள்!

மறுநாள் இரவு பன்னிரண்டு மணி. கோட்டான்கள் கூவின. ஜாமக் காக்கைகள் கரைந்தன. எங்கோ ஒரு சொறிநாய் பெரிதாக ஊளையிட்டு ஓய்ந்தது. குளிர்ந்த காற்று சில்லென்று வீசியது. வெளியே இருள்மழைப் பொழிந்து கொண்டிருந்தது! சில நிமிஷங்கள் கடந்திருக்கும்...

குப்பென்று ரோஜா மணம் வீசியது. புத்தகத்தை மூடிவிட்டு நிமிர்ந்தேன். என் மனைவி கொண்டாடும் உரிமையைவிட அதிக உரிமையுடன் என் அருகில் வந்து ஒட்டி உராய்ந்து கொண்டு உட்கார்ந்தது நேற்றிரவு வந்த அந்தப் பெண் பேய்! அது இன்று தன்னை ரொம்பவும் அற்புதமாக சிங்காரித்துக்கொண்டு வந்திருந்

தது! என் எதிரேயிருந்த இரண்டு நாற்காலி களில் அந்த இரு ஆண் பேய்களும் உட்கார்ந் தன. அவற்றின் முகம் இன்று உற்சாகமாக இல்லை! சோம்பிச் சுருங்கி இருந்தன!

"நீங்கள் ரொம்பவும் நல்ல மனிதர்!" என்று கொஞ்சும் குரலில் சொன்னது பெண் பேய்.

"ஏன்?" என்றேன் சிரித்துக்கொண்டே.

"எங்களை நீங்கள் மிகவும் நேசிக்கிறீர்கள்! எங்களுக்காக இன்னும் தூங்காமல் விழித்துக் கொண்டிருக்கிறீர்கள்!" என்று ஓர் ஆண் பேய் சொல்லிச் சிரித்தது.

"இதற்கெல்லாம் கைம்மாருக என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள்?" என்று கிண்டலாகக் கேட்டேன்.

"இதோ கொண்டுவதிருக்கிறோம், உங் களுக்கு ஒரு பரிசு!" என்று கூறிக்கொண்டே அந்தப் பெண் பேய் தன் கையில் மறைத்து வைத்திருந்த ஒரு பழைய மண்டை ஓட்டை என்னிடம் நீட்டியது.

"இது என்ன?" என்று வியப்புடன் கேட் டேன்.

"இதுவா? இது எகிப்து நாட்டின் காதல் ராணியான கிளியோபாட்ராவின் மண்டை ஓடு!" என்று சிரித்தது அந்தப் பெண் பேய்.

"இது ஏன் எனக்கு?"

"ஏனு? இந்த மண்டை ஓட்டுக்கு உரிய வள் ஒருகாலத்தில் உங்கள் அருமைக் காதலி யாக இருந்தாள்!"

"என்ன! கிளியோபாட்ரா என் காதலியா?"

"ஆமாம். நீங்கள் அப்போது மாவீரன் சீஸராய் இருந்தீர்கள்! உங்கள் வாள் வலிமை யால் பல மண்டலாதிபதிகளை யெல்லாம் மண்ணைக் கவ்வச் செய்த நீங்கள்தான் இந்த வேல் விழியாளின் பாதங்களில் நாய்குட்டிபோல் அடங்கி ஒடுங்கிப் படுத்துக் கிடந்தீர்கள்; அதெல்லாம் நடந்து ஆறேழு ஜன்மங்களுக் 

குமேல் ஆகிவிட்டன! இப்போது நீங்கள், இந்த ஜன்மத்தில், பஞ்சைத் தொழிலான இந்தப் பாழும் எழுத்துத் தொழிலில் இறங்கி... இப்படி...''

வயிறு குலுங்கச் சிரித்துவிட்டேன் நான். நான் சீஸராம்! என் மாஜி காதலி கிளியோபாட்ராவாம்! ஏன் இருக்கக் கூடாது? பேய்கள் பொய் சொல்வதில்லை! சீஸர் வாளை உருவும் ஸ்டைலில் நான் என் பேனாவின் மூடியை சரேலெனக் கழற்றிக் கையில் ஏந்தினேன்! அந்த மூன்று பேய்களும் குப்பென்று சிரித்து என்னைக் 'கோட்டா' பண்ண ஆரம்பித்தன.

''உங்களுக்கு அந்தக் கதையைத் தொடர்ந்து படிக்க விருப்பமில்லையா?'' என்று கேட்டேன்.

''அதற்காகத்தானே வந்திருக்கிறோம்!'' என்று ஆர்வமுடன் சொன்னது பெண் பேய்.

''அப்படியானால் இந்த மண்டை ஓட்டை எடுத்து வைத்துக்கொள்! நான் விட்ட கதையை இன்று எழுதி முடித்து விடுகிறேன்!''

''ஏன் இந்த மண்டை ஓடு உங்களுக்கு வேண்டாமா? இது உங்கள் காதலியின் தலை ஓடு!''

''இது என் மனைவியின் கண்ணில் பட்டால் என்னை இரண்டிலொன்று பார்த்துவிடுவாள்!''

''உங்கள் மனைவி யார் தெரியுமா?''

''லைலாவா?''

''இல்லை. அவள்தான் மாஜி கிளியோபாட்ரா!''

நான் சிரித்தேன்.

''நம்பவில்லையா?''

''ஏன் நம்பவில்லை? அவள் மூக்கு வளைந்து இருக்கிறது! ஒரு முத்துமாலை வேண்டுமென்று மூன்று வருஷமாகத் தொண தொணக்கிறாள்! அடுத்த மாசமாவது அவளுக்கு ஒரு போலி முத்து மாலை ஆறேழணா விலையில் வாங்கிக் கொடுத்துவிடலாம் என்ற பிளானில்

இருக்கிறேன்! இப்போது பாண்டிய நாடும் இல்லை! அங்கே முத்துக் குளிப்பதும் இல்லை!''

"பார்த்தீர்களா? இதெல்லாம் பூர்வஜன்ம வாசனை!''

''வாள் ஏந்திய கையால் நான் இப்போது இந்தப் பேனாவை ஏந்திக்கொண்டிருப்பதும் பூர்வ ஜன்ம வாசனை தானே?''

"இதிலென்ன சந்தேகம்? நிச்சயமாக!''

"சரி; நான் அந்தக் கதையை எழுத ஆரம்பிக்கலாமா?''

"இன்று அதை முடித்துவிட வேண்டும். தொடரவிடக் கூடாது!''

''சரி! ஆனால்......''

''என்ன வேண்டும்?''

''காபி, சிகரெட்!''

நேற்றுபோல் இன்றும் அந்த இனிமை மிக்க சிகரெட்டும், சுவையும் மணமும் மிக்க காபியும் கிடைத்தன.

உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு எழுத ஆரம்பித்தேன்!...

## 9

ஆடை யணிகளால் மட்டுமே மனிதர்கள் தங்கள் உருவை மாற்றிக்கொள்ள முடியும். ஆயினும் அது வெற்றிகரமான உரு மாற்றமாய் அமைவதில்லை. ஆனால், ஆவியுலக வாசிகளுக்கு இந்த விஷயம் ரொம்பவும் அநாயாசமானது. நினைத்த நேரத்தில், எண்ணியவிதமாக எல்லாம் உருவெடுக்க அவைகளால் முடியும்!

நடனசபேசனும் இப்போது அப்படித்தான் செய்தான். ஒரு நடுத்தர வயதுள்ள அழகான வாலிபன்போல் உருவெடுத்தான். ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி யொன்றின் ஏஜெண்டு என்று தன்னைச் சொல்லிக்கொண்டு, தன்னுடன் காதலில் போட்டி போட வந்துவிட்டிருக்கும் அந்த ஆசாமியின் மாஜி மனைவி வீட்

டுக்குப் பக்கத்து வீட்டில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்து அதில் குடியேறினுன்.

பேய்கள் மனித உரு எடுப்பதிலே ஒரு பெரிய சங்கடம் இருக்கிறது. மூன்று மணி நேரத்திற்குமேல் அவை எடுக்கும் எந்த உருவும் இருப்பதில்லே. இருபத்தி நான்கு மணி நேரத்தில் மூன்று மணி நேரமே அவை மனித உருவிலோ மிருக உருவிலோ பறவை உருவிலோ அல்லது வேறு எந்த ஜீவராசிகளின் உருவிலோ இருக்கமுடியும். பிறகு அவையறியாமலே அந்த உரு அந்தர்த்தியானம் ஆகிவிடும்! அதோடு இருபத்தொரு மணி நேரங்கழித்தே மீண்டும் ஓர் உருப்பெற அவற்ருல் முடியும்! இன்ஷ்யூரன்ஸ் ஏஜென்டுபோல் உருமாறி வந்த பேய் மனிதனுன சபேசன், அந்த வாடகை அறையில் மூன்று மணிநேரம் ரொம்பவும் தடபுடலாக இருந்துவிட்டு, பிறகு கப்சிப்பென்று கதவைச் சாத்திக்கொள்வான்! இந்த இரகசியத்தை மனிதர்களால் கண்டு பிடிக்க முடியுமா என்ன? அவனே ஒரு நிஜ மனிதன் என்றே எண்ணி, அவன் அறையில் இல்லாதபோதெல்லாம் எங்கோ வேலேயாக வெளியே போய் இருக்கிருன் என்றே எண்ணி வந்தனர். பகலில் அவன் அறை சுத்தமாக இருக்கும்; இரவில் விளக்கு எரிந்துகொண்டிருக்கும். இதனுல் அவனே ஒரு பெரிய குடும்பத்துப் பிள்ளேயென்றே எல்லோரும் தீர்மானித்திருந்தனர்!

கோமளா என்ற அந்தப் பெண்ணுக்கு வயது சுமார் இருபத்தாறு இருக்கும். சுமாரான அழகி. சுண்டைக்காய் வத்தல் போன்ற திரேகம். ஆனுல் அவள் கண்கள் ஒருவித நெடியான ஒளிபெற்று விளங்கின. அந்தக் கண்களேச் சந்திக்கும் எந்த வாலிபனும் அவளே கோணலான எண்ணத்துடன் பார்க்கவே செய்வான். அத்தகைய 'செக்ஸ் மாடல்' கண்கள் அவை! பால்ய விதவைக்குரிய வாட்டமோ ஏக்கமோ அவளி

டம் கடுகளவுகூடத்தென்படவில்லை. நேற்று தான் பெரிய மனுஷியான பெண்ணைப்போல அவள் விநாடிக்கொரு நொடிப்பும் வேளைக்கோர் அலங்காரமுமாக விளங்கினாள் !

மூன்று மணி நேர மனித வேஷக்காரனான சபேசன் கோமளாவுக்கு வலைவிரிக்க ஆரம்பித்தான். அவன் வலை விரிக்கா முன்னரே அவள் தன் வலையைப் பரக்க விரித்து விட்டாள் ! அக்கம் பக்கம் பார்த்து சிரிக்கவும், கதவிடுக்கிலும் ஜன்னல் ஓரத்திலும் நின்று கண்ணடிப்பதுமாக இருந்த கோமளா ஒரு சில நாட்களுக்கெல்லாம் சபேசனிடம் நேரடியாகப் பேசத் துணிந்துவிட்டாள் !

ஒன்றிரண்டு வாரங்கள் நகர்ந்தன. கோமளா சபேசனின் அறைக்கே வரத் தலைப்பட்டாள் ! பேய் மனிதனுக்கும் மனிதப் பெண்ணுக்கும் வெகு வேகமான காதல் ஜுரம் பிடித்துக்கொண்டது. தன்னிடமுள்ள மாயப் பொருள்களையும் மாயப் பணத்தையும் அவளுக்குக் காட்டி அவளை நன்றாக ஏமாற்றி வந்தான் சபேசன். அவன் அவளுக்கு அன்பாக வாங்கித் தரும் ஆசைப் பொருட்களெல்லாம் அவள் தன் வீட்டுக்குக் கொண்டுபோன சில மணி நேரங்களுக்கெல்லாம் மாயமாய் மறையத் துவங்கின ! ஆனால் இந்த இரகசியத்தைத் தெரிந்துகொள்ளாத கோமளா, தன் காதலன் வாங்கித் தரும் பொருட்களை தனது வீட்டிலிருக்கும் யாரோதான் திருடிக்கொள்கிறார்கள் என்று எண்ணி எல்லோரையும் வாய்க்கு வந்தபடி திட்ட ஆரம்பித்து விட்டாள்! சபேசனுக்கு இதையெல்லாம் காண ரொம்பவும் வேடிக்கையாக இருந்தது!

சபேசனிடம் கோமளா கொண்டுள்ள கள்ளத் தொடர்பை அவளின் மைத்துனன் எப்படியோ தெரிந்து கொண்டான். தெரிந்து கொண்டு அவளை என்ன செய்ய முடியும்?

சபேசனைத்தான் அவன் முறைப்பதும் விழிப்பதுமாக இருந்தான். அவனை அங்கிருந்து எப்படியும் கிளப்பிவிட ஏதேதோ குயுக்தி வேலைகளெல்லாம் செய்தான். ஒன்றும் பலிக்கவில்லை. ஆவியுலக வாசியான சபேசனை அவன் என்ன செய்துவிட முடியும்? வழி மறித்து அடிக்கவோ கொலை செய்யவோகூட முடியாதே!

கோமளாவிடம் சபேசன் ரொம்பவும் ஜாக்கிரதையாகப் பழகி வந்தான். அவன் மனித உரு எடுக்கும் அந்த மூன்று மணி நேரத்திற்குள்ளேயே அவளிடம் நாசூக்காகப் பழகிக்கொண்டான். மனித உரு கலையும் சமயம், அவளே அவனைத் தேடிக்கொண்டு வந்தால்கூட ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி அனுப்பிவிட்டு சட்டென மறைந்து விடுவான்! இந்த விஷயங்களையெல்லாம் அவன் தினந்தோறும் மல்லிகாவிடம் சென்று கதை கதையாகச் சொல்லுவான். அவள் விழுந்து விழுந்து சிரிப்பாள்!...

ஒருநாள் சபேசன் கோமளாவிடம் ரொம்பவும் எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டான்!

அன்று அவள் அவனைச் சந்திக்க வந்தபோது அவனுடைய மனித உரு மாற இன்னும் ஐந்து நிமிஷங்களே இருந்தன! கொஞ்ச நேரம் அவளிடம் பேச்சுக் கொடுத்துக் கொண்டிருந்தாலும் அவள் எதிரிலேயே அவன் மாயமாய் மறைய வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டுவிடும். குட்டு வெளிப்பட்டால் அவன் இருக்கும் பக்கமே அவள் தலை வைத்துப் படுக்க மாட்டாளே! அத்துடன் அவனுடைய திட்டமும் தலைகீழாகத் தோற்றுவிடுமே! அப்புறம் மல்லிகாவை அவன் அடைவது எப்படி?...

சபேசன் சட்டென ஒரு குயுக்தி செய்தான்! அவள் வந்தவுடன், பக்கத்து அறையில் ஒரு புத்தகத்தை எடுத்து வருவதைப் போல்

போனுன். கோமளா காதல் மயக்கத்துடன் கூடத்து அறையில் உட்கார்ந்திருந்தாள். உள்ளே போன சபேசனுக்கு சட்டென மனித உரு கலேந்து விட்டது. அதோடு அந்த உருவின் நேரம் தீர்ந்து விட்டதால் அவன் மறைந்தான்! ஆனல் உடனே ஒரு பாம்பு உருவம் எடுத்தான்! கூடத்து அறையில் உட்கார்ந்திருந்த கோமளாவை நோக்கிப் படம் எடுத்துப் புஸ்ஸெனச் சீறி நெளிந்து வந்தான்!

பாம்பைக் கண்ட கோமளா பதைத்து அலறிக் கொண்டே வெளியே ஓடிவிட்டாள்! ஆவியாய் இருந்த சபேசன் வெறும் குரல் மட்டும் கொடுத்தான்; "கோமளா! கோமளா! பயப்படாதே! பாம்பை நான் அடித்து விட்டேன்! வா! பேசலாம்! வா! வா, கோமளா!"

அவள் திரும்பிப் பார்க்கவே இல்லே; ஒரே ஓட்டமாக ஓடி தன் வீட்டில் நுழைந்தே கொண்டாள்!

அதன் பிறகு இரண்டொரு நாள் வரை அவள் சபேசனேப் பார்க்கவே இல்லே. அப்புறம் கோமளாவை சபேசன் எப்படியெப்படியோ தாஜா பண்ணி, சொக்கச் சொக்கப் பார்த்துப் பேசிச் சிரித்து ஒரு தினுசாகச் சரிசெய்து விட்டான். ஆயினும் அவள் அறைக்கு வர மறுத்தே விட்டாள்! அந்தப் பாம்பைக் கண்ட பயம் அவள் நெஞ்சில் ஆழமாகப் பதிந்து விட்டது. தன் காதலனே இனிமேல் அந்த வீட்டில் குடியிருக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டாள்! ஏனென்றல், உண்மையாகவே அவள் அவனே இப்போது தன் உளமாறக் காதலித்தாள்! அவளுடைய தூய காதலின் மணம், மல்லிகாவின் காதலே விட அவனுக்கு மிக உயர்வாகப் பட்டது! அப்பேர்பட்ட ஒரு பெண்ணே தான் வஞ்சித்து அநியாயமாகச் சாகடிக்கப் போகிறோமே என்ற வேதனே அவனே வெகுவாக வதைத்தது! முதலில் அவளே அவன் தன்

காரிய வெற்றியின் கருவியாகப் பாவித்தே காத லிப்பது போல் நடித்தான். ஆனால், இப் போதோ அவளின் தூய அன்புக்குத் துரோகம் செய்கிறேமே என்று உள்ளம் நொந்தான்! ஆவியுலக வாலிபனான அவன் ஒரு மனிதப் பெண்ணைக் காதலிக்க முடியுமா? மோகினிப் பேய்களில் பெண்ணும் உண்டு; ஆணும் உண்டல்லவா? ஆண்மோகப் பேயான அவன் அவளை உண்மையாகவே காதலிக்க ஆரம்பித்து விட்டான்!

ஆனாலும் அவன் அருமைக் காதலி மல்லிகா வின் நினைவு அவனுக்கு வராமல் இல்லை. இந்த இக்கட்டான நிலைக்கு என்ன செய்வதென்றே அவனுக்கு விளங்கவில்லை. இருதலைக் கொள்ளி எறும்புபோல் அவன் அல்லாட ஆரம்பித் தான்!...

கடைசியில் அவன் பேய் மனம் அந்தப் பேதைப் பெண் கோமளாவை வஞ்சிக்கவே துணிந்துவிட்டது!

ஒருநாள்—

ஒதிய மரமொன்றின் மறைவில் சபேசனும் கோமளாவும் இரகசியமாகச் சந்தித்து இன்ப மாகப் பேசிக்கொண்டிருந்தனர். அன்றொரு நாள் அந்தப் பாம்பைக் கண்டதிலிருந்து அவனை அவன் அறையில் சந்திக்க அவள் போவதே இல்லை. அதனால்தான் இப்படி வெளியே சந்திப்பு நிகழ்ந்தது.

“நீங்கள் இன்னும் அந்த அறையை காலி செய்யவில்லையா? அங்கே நீங்கள் இருக்கும் வரை நான் உங்களைப் பார்ப்பது ரொம்பவும் அபூர்வமாகத்தான் இருக்கும்!” என்றாள் கோமளா கொஞ்சலான கோபத்துடன்.

“நான் என்ன செய்வது? நினைத்த சமயத் தில் வீடு மாறிக்கொள்ள இந்தப் பெரிய நகரத் தில் முடியுமா? ஆயினும் நான் உனக்காக ஒரு நல்ல வீடு தேடிக்கொண்டுதான் இருக்கிறேன்!”

என்று மழுப்பினுள் சபேசன்.

அவள் சற்றுநேரம் மௌனமாய் இருந்து விட்டுச் சொன்னுள்: "நாமிருவரும் எத்தனே நாட்களுக்கு இப்படியே சந்திலும் பொந்திலும் மரத்தடியிலும் சினிமா கொட்டகையிலும் மறைந்து பதுங்கி ஒதுங்கி ஒடுங்கிச் சந்தித்துக் கொண்டிருப்பது? எனக்கு இதெல்லாம் கொஞ்சமும் பிடிக்கவில்லே!"

"வேறு என்ன செய்யலாம்?"

"எல்லோரும் செய்வதை செய்து கொள்ளலாம்!"

"எங்காவது ஒரு மரத்தில் இருவரும் தூக்குப் போட்டுக்கொள்ளலாம் என்கிருயா?"

"ஆமாம். தூக்குத்தான் போட்டுக்கொள்வோம்! ஆனல் எந்த மரக்கிளேயிலும் அல்ல; ஒரு முழ மஞ்சள் நூலே வாங்கி வந்து என் கழுத்தைச் சுருக்காமல் சுருக்கி முடிச்சுப்போட்டு விடுங்கள்! அது போதும்!"

அவர்கள் இருவரும் கலகலவெனச் சிரித்து விட்டனர். அவன் சொன்ஞன்: "கல்யாணமா? எதற்குக் கல்யாணம்? நாமிருவரும் இப்படியே கணவன் மனேவிபோல் இருந்துவிடலாமே!"

"ஏன்? நான் விதவை என்பதால் என்னே மணக்க பயப்படுகிறீர்களா?" என்று அவள் கண்கலங்கக் கேட்டாள்.

"சே, சே! அதெல்லாம் இல்லே! உலக மனிதர்களுக்குத்தான் பெண்ணே விதவையென்றும் கன்னி என்றும் பிரிக்கத் தெரியும்! என்னேப் போன்ற ஆவியுலக......ஆங்......ஒன்றுமில்லே.. ...வந்து.....என்னேப் போன்ற முற்போக்கு—ஆமாம், முற்போக்கு—எண்ண முடையவர்களுக்கு அப்படி ஒன்றுமே இல்லே!...நான் எதற்காக அப்படிச் சொன்னேன் என்ருல், உன் உறவினர்கள் ஒப்புக்கொள்ள மாட்டார்களே என்பதற்குத்தான்!" என்று திக்கித் திணறிஞன் சபேசன்.

"என்ன, ஆவியுலகம் பேயுலகம் என்றெல்லாம் உளறுகிறீர்கள்? நமது திருமணத்தைத் தடை செய்ய என் உறவினர்கள் யாராலுமே முடியாது! எல்லாம் என் இஷ்டம்தான்!" என்று அழகாகச் சிரித்துச் சொன்னாள் கோமளா.

"உன் கணவன் இறந்து இன்னும் மூன்று மாதம்கூட ஆகவில்லையல்லவா? அதற்குள் நாம்....." என்று வாக்கியத்தை முடிக்காமல் இழுத்து நிறுத்தினான் சபேசன்.

"என் கணவன் இறந்து மூன்று மாதம் தானா ஆகியது? அவன் என் கழுத்தில் தாலி கட்டிய அன்றே நான் விதவையாகிவிட்டேன்! அவன் ஒரு சரியான பீர்க்கங்காய்! மனைவியின் இதய வீணையை மீட்டத் தெரியாத அப்பாவி! தமிழில், தேமாங்காய் புளிமாங்காய் கூவிளங்காய் கொத்தவரக்காய் என்று தேடிக்கொண்டிருக்கவே அவனுக்கு நேரம் போதாது! இந்த லட்சணத்தில் ஒரு கல்லூரி மாணவியை வேறு அவன் காதலிக்க ஆரம்பித்தான்! அறுக்க மாட்டாதவன் கையில் அறுபத்தெட்டு அரிவாளாம் என்பதுபோல, என்னிடம் காதல் பண்ணத் தெரியாதவன், ஹாஸ்டல் சோற்றைத் தின்றுவிட்டு கோயில் மாடுபோல் சுற்றித் திரிந்த அந்த இளம் பெண்ணின் பின்னால் அவன் செக்குமாடு போல் சுற்றித் திரிந்துகொண்டிருந்தான்! ஆனால் அவளோ, உங்களைப் போன்ற ஒரு வாலிப மாணவனின் காதலுக்காக ஏங்கித் தவமிருந்து கொண்டு கிடந்தாள்! அது தெரிந்தும் இந்தக் குந்தாணி மனிதன் அந்தக் குட்டியைச் சுற்றி வட்டமிடுவதை நிறுத்தவில்லை! கடைசியில் ஒரு நாள் அந்தப்பெண் ரெயிலில் அறைபட்டு மாண்டாள்! அதே ஏக்கம் பிடித்துக்கொண்ட என் கணவன், பைத்தியக்காரனைப் போல அவள் பெயரையே உளறிக்கொண்டிருந்துவிட்டு, மறு வாரம் கபால ஜன்னி கண்டு செத்து ஒழிந்தான்! இந்த இரகசியம் தெரியாத அந்த

மாணவன், தன் காதலி மகா பதிவிரதை என்ற நினைப்பில் அவள் எண்ணமாகவே இருந்து புத்தி பேதலித்து நாயாகவும் பேயாகவும் சுற்றி அலைந்து இறுதியில் ஒருநாள் அந்த மோகினிப் பேய்க்குப் பலியானான்! விஷயம் இப்படியெல்லாம் இருக்க, என்னைப் பார்த்து அப்படிக் கேட்கிறீர்களே! நான் சொல்கிறேன்: என் கணவன் இன்று காலை இறந்திருந்தால்கூட இன்று மாலையே உங்களை நான் மணக்கக் கொஞ்சமும் பின்வாங்க மாட்டேன்! இன்னும் ஒருபடி மேலேறிச் சொல்ல வேண்டுமென்றால், என் கணவன் சாகாமல் உயிரோடு இருந்திருந்தால் கூட உங்களுக்கு நான் பகிரங்க மனைவியாகச் சற்றும் பயப்படவே மாட்டேன்!''

உணர்ச்சியின் உத்வேகத்தால் அவள் உடல் நடுங்கியது. அவன் எல்லையற்ற வியப்பால் மரமாகி அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான். ஒரு பெண் ஓர் ஆடவனை இத்தனை மூர்க்கா வேசமாகக் காதலிப்பான் என்பது அவனுக்கு இதுவரை கனவில்கூட கண்டறியாத ஒரு விஷயமாக இருந்தது. அவளுக்கு என்ன பதில் சொல்லலாம் என்பது பற்றி அவன் தீவிரமாக யோசித்துக்கொண்டிருந்தான்.

''என்ன இப்படிப் பேய் அறைபட்டவன் போல் நின்றுகொண்டிருக்கிறீர்களே!'' என்று சிரித்தபடி கேட்டுக்கொண்டே அவன் நெஞ்சைப் பிடித்துக் குலுக்கினாள் கோமளா.

''ஆமாம், நான் ஒரு பேய்தான்!...'' என்று ஏதோ யோசனையில் தன்னை மறந்து குழறினான் சபேசன்.

''நல்ல விளையாட்டு மனிதர் நீங்கள்!'' என்று அவன் கையைப் பற்றினாள் அவள். அந்தக் கை, ஐஸ் கட்டிபோல ஜில்லிட்டிருந்தது! அது ஒரு மனிதனின் கைபோலவே அவளுக்குத் தோன்றவில்லை. சட்டெனத் தன்

கையை எடுத்துக் கொண்டாள்!

"அது ஒன்றுமில்லை. உன் உணர்ச்சிகரமான பேச்சால் என் உள்ளம் குளிர்ந்து உடல் ஜில்லிட்டுவிட்டது! மற்றபடி என்னை நீ ஒரு பேய் என்று எண்ணிவிடாதே!'' என்றான் சபேசன் தளுக்காகச் சிரித்துக்கொண்டே.

"என்ன நீங்கள், எப்போது பார்த்தாலும் பேய் பேய் என்றே சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள்? எனக்குப் பேய் என்ற வார்த்தையைக் கேட்டாலே பயம்! இனிமேல் அப்படிச் சொல்லாதீர்கள்!'' என்று சிணுங்கினாள் கோமளா.

"அப்படியா? இனிமேல் சொல்லவில்லை!'' என்று மழுப்பினான் சபேசன்.

"சரி; உங்களை இனிமேல் எங்கே சந்திப்பது? நான் சொன்ன விஷயத்தைப்பற்றி எப்போது என்னிடம் முடிவு தெரிவிக்கப் போகிறீர்கள்?'' என்று கொஞ்சலாகக் கேட்டாள் கோமளா.

"நம் கல்யாண விஷயம்தானே? நாளைக்குள் அதுபற்றி என் முடிவைச் சொல்லி விடுகிறேன்!''

"நாளைக்குள் என்றால், நாளைக்கு எங்கே, எப்போது, எந்த இடத்தில் இதெல்லாம் ஒன்றும் இல்லையா?''

"சொல்வதற்குள் அவசரப்படுகிறாயே கோமளா!''

"என் அவசரம் உங்களுக்கு என்ன தெரியும்? என் உடம்பு நெருப்பாகக் கொதிக்கிறது? உங்கள் அணைப்புதான் அதைக் குளிரப் பண்ணும்!''

"அவ்வளவு தானே! என் உடம்பே பனிக்கட்டியால் ஆனது! பனியும் நெருப்பும் சேர்ந்தால் பவித்திரமான ஒரு புதிய கலவைப் பொருள் கிடைக்கும்! அது என்ன தெரியுமா?''

"தெரியும்! அதன் பெயர் சொர்க்கம்!''

அவள் கண்கள் துடித்தன. முகம் சிவந்

தது. உதடுகள் வெளுத்தன. உடல் ரோமாஞ்சலியுடன் ரீங்காரமிட்டது. அவன் இந்தயெல்லாம் பார்த்து மந்தகாசமாகச் சிரித்துக் கொண்டான்.

"சரி, சொல்லுங்கள். நாளைக்கு உங்களை எங்கே நான் சந்திப்பது?" என்று கேட்டாள் கோமளா.

"என் அறையில்!" என்முன் சபேசன் புன்னகையுடன்.

"உங்கள் அறைக்கா? ஐயையோ! நான் வரமாட்டேன். அங்கே பாம்பு இருக்கும்!"

"சரி, வேண்டாம்!"

"வேண்டாமா? வேருேர் இடம் சொல்லுங்கள்! அது இடு காடாய் இருந்தால்கூட நான் அங்கு வரத் தயார்!"

"அங்கெல்லாம் வேண்டாம். இந்த வட்டாரத்திலேயே நாம் சந்திக்க ஓர் அருமையான இடம் இருக்கிறது!"

"அந்த இடத்தைச் சொல்லுங்கள்!"

"நாளைக்குப் பௌர்ணமி நிலவு! பால் போல் ஒளிவெள்ளம் பாய்ந்து கிடக்கும்! இரவு ஏழே முக்கால் மணிக்கு, அதோ தெரியும் அந்த ரெயில்வே பாலத்தடிக்கு வா! உனக்கு முன் நான் அங்கே வந்து உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன்!"

"அந்த ரெயில்வே பாலத்தண்டையா?..."

"ஏன்? என்ன தயக்கம்?"

"ஒன்றுமில்லை. அங்கேதான் என் கணவனின் காதலி ரெயிலில் அறைபட்டு மாண்டு போனுள்? அங்கேதான் அந்தக் கல்லூரி மாணவனும் தற்கொலை செய்து கொண்டான்!"

"சே! பைத்தியம்! அங்கே எத்தனைபேர் செத்தால் நமக்கென்ன? நாமெல்லாம்கூட ஒரு நாள் சாகப் போகிறவர்கள்தானே? இன்று செத்தால் என்ன? நாளை செத்தால் என்ன? நானூறு வருஷத்துக்குப்பின் செத்தால்

என்ன? எல்லாம் ஒன்றுதானே? எப்படியும் நடந்து ஆகவேண்டிய விஷயம்தானே?''

"என்ன இப்படித் திடீரென்று வேதாந்தம் பேச ஆரம்பித்துவிட்டீர்கள்?''

"இது வேதாந்தமா? எதிர்கால உண்மை; அவ்வளவுதான்!...அது கிடக்கட்டும். நான் இருக்கும்போது உனக்கு என்ன பயம்? ஒரு உண்மைக் காதலனுடன் ஓர் உண்மைக் காதலி பேய் உலகத்துக்குச் செல்லக்கூட பின்வாங்க லாகாதே!''

"சரி, சரி! நான் பின்னும் வாங்கவில்லை; ஊசியும் வாங்கவில்லை! உங்கள் சொல்படி நான் நாளை இரவு ஏழே முக்கால் மணிக்கு அந்தப் பாலத்தண்டை வருகிறேன்! சரிதானே?''

"ரொம்ப சரி!'' என்று கூறி மன்மதச் சிரிப்புச் சிரித்தான் சபேசன். கோமளாவும் ரதிச் சிரிப்புச் சிரித்தாள்.

"நான் கிளம்பட்டுமா? ஆபீஸுக்கு நேர மாகிறது!'' என்று புறப்பட ஆயத்தமானான் சபேசன். அவன் அத்தனை அவசரமாகப் புறப் படுவதற்குக் காரணம் அவனுடைய மனித உரு மறைய இன்னும் இரண்டொரு நிமிஷமே இருந்தன!

ஆனால் அவளோ?—

"இதற்குள் என்ன அவசரம்? இன்னும் கொஞ்சநேரம் இருங்களேன்! இன்பமாகப் பேசிக்கொண்டிருப்போம்!'' என்று கோமளக் குரலில் கொஞ்சிக்கொண்டே அவன் கழுத்து டையைச் செல்லமாக எட்டிப் பிடித்துக் கொண்டாள்.

சபேசனுக்கு என்னசெய்வதென்றே தெரிய வில்லை. இன்னும் இரண்டே நிமிஷம்தான்!... அதற்குள் அவன்......சட்டென ஒரு யோசனை அவனுக்குத் தோன்றியது. "கோமளா! கோமளா! அதோ பார்! உன் மைத்துனன் வரு கிறான்!'' என்று ஒரு திசையைச் சுட்டிக் காட்டி

றன். உண்மையில் அந்தத் திசையில் யாருமே வரவில்லை. ஆயினும் கோமளா அங்கிருந்து போக மனமின்றி புறப்பட்டு இரண்டடி சென்றுள்.

அதற்குள்—

சபேசன் சரேலெனப் பாய்ந்து அந்த ஒதிய மரத்தின்மேல் சரசரவென ஏறினன். பாதிமரம் ஏறுவதற்குள் அவனுடைய மனித உருவம் மறைந்துவிட்டது!

இரண்டு அடி எடுத்துவைத்த கோமளா ஏதோ நினைத்துக்கொண்டு திரும்பிப் பார்த்தாள்.

அடுத்த கணம்—அவள் கண்டத்திலிருந்து 'ஹா' வென்ற பயங்கர அலறல் பளீரெனக் கிளம்பி எங்கும் எதிரொலித்தது!

அதே சமயம்—

அந்த ஒதிய மரத்தின் பெரிய கிளை ஒன்று பலபலவெனக் குலுங்கி, மளமளவென்ற பேரொலியுடன் முறிந்து மடாரெனக் கீழே சாய்ந்தது!

கோமளா அந்த மரக்கிளையின் அடியில் மாட்டிக்கொண்டு நசுங்கி இறந்தாள்!...



"கதையை முடிக்கப் போகிறேன்! கவனமாகப் படியுங்கள்!" என்று சொல்லிக்கொண்டே நிமிர்ந்தேன்.

"என்ன! முடிக்கப் போகிறீர்களா?" என்று பெண் பேய் திடீரெனக் கத்தியது.

"ஆமாம்! மரக்கிளை விழுந்து அதனல் மாண்டுப்போன கோமளாவையே சபேசன் தன் ஜன்ம ஜன்மக் காதலியாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டான்! கோமளாவின் கணவனையே தன் ஜன்மக் காதலனகத் தேர்ந்து வரித்துக் கொண்டாள் மல்லிகா! அவளின் காதலனன அந்த ஆசாமி யார் தெரியுமா?...அவன்தான்..."

# 10

கடைசி வார்த்தையை எழுதி முடிக்கப் பேனுவைக் காகிதத்தில் பொருத்தினேன். இவ்வளவு நேரம் வரையில் ஈ நுழைவதுகூடத் தெரியாமல் என் கதையை சுவாரஸ்யமாகப் படித்துக்கொண்டு வந்த அந்த மூன்று பேய்களும் திடீரென என் மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து எனது மெலிந்து சிறுத்த கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பேய் பலத்துடன் குலுக்கி ஆட்டின! நான் அலறி யடித்துக் கொண்டு விழி பிதுங்க அவற்றைப் பரிதாபமாகப் பார்த்தேன்!

அழகாக இருந்த அந்தப் பெண் பேய், இப்போது அதிகோரமாகத் தன் கண்களை உருட்டி நாக்கை மடித்துப் பற்களை நறநறவெனக் கடித்துக்கொண்டு, "ஓய், கதாசிரியரே! என்ன, எங்களிடமே உம் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்துவிட்டீர்? இவ்வளவுநேரம் நீர் எழுதி வந்தது உண்மையில் துப்பறியும் காதல் கதைதானு?...எங்களின் மாஜி மனித வாழ்க்கையை எங்களிடமே கதையாக எழுதிக் காட்ட உமக்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் இருக்கவேண்டும்!" என்று குமுறிக் கூச்சலிட்டது.

"ஐயோ, அம்மணீ! அடியேன் அப்படி ஒரு பாவமும் அறியேனே!" என்று தொண்டையடைக்க, தொடை நடுங்க, நாக்குழற பிரலாபித்தேன்.

"பொய் சொல்லுகிறீர்!...என்னமோ, புத்திசாலித்தனமாகக் கதை எழுதுகிறீரே என்பதற்காக, இப்போதைக்கு உம்மைச் சும்மா விட்டுவிடுகிறேன்! அந்த எலும்புப் பிடியிலிருந்து எழுந்துவந்த வாலிபனின் பெயரையோ அல்லது அவன் யார் என்பதையோ வெளியே சொன்னீரோ, அந்த நிமிஷமே வந்து உமது கொக்குக் கழுத்தை முறித்து எறிந்துவிடுவேன் தெரிந்

ததா? ஜாக்கிரதை!" என்று கர்ஜித்தன அந்த ஆண் பேய்கள்.

"சொன்னது காதில் விழுந்ததா?" என்று என் காதைப் பிடித்து முரட்டுத்தனமாகத் திருகியது அந்தப் பெண் பேய்.

"பாதிக் கதை எழுதி முடித்தபோதே உன் கையை முறித்து அடுப்பெரித்து விட்டிருப்பேன்! கடைசியில் என்னதான் சொல்லி முடிக்கிறுய் என்று பார்ப்பதற்காகவே பல்லைக் கடித்துக்கொண்டு பேசாமல் இருந்தேன்! நான் நினைத்தபடியேதான் நடந்துவிட்டது!" என்று கூச்சலிட்டது ஓர் ஆண் பேய். அதன் வாயிலிருந்து கொத்துக் கொத்தாகக் கொள்ளிக் கட்டைகள் கீழே விழுந்து தெறித்தன!

"ஆளைப் பார் ஆளை! ஆளைப் பார்த்தால் ஆட்டுக் குட்டியைப் போல் இருக்கிருர்! பேய்களையே ஏமாற்றி கறி சமைத்துவிடும் பக்கா பேர்வழிபோல் இருக்கிறது! பேய்களின் இரகசியங்களைக்கூடத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கும் இந்த ஆசாமியை இங்கே விட்டு வைப்பதே ரொம்பவும் ஆபத்து! சீக்கிரத்தில் இவரையும் நம் உலகுக்குத் தள்ளிக்கொண்டு போய்விட வேண்டியதுதான்!" என்று எகத்தாளமாகச் சொல்லிச் சிரித்தது அந்தப் பெண் பேய். ஐயோ, இப்போது அதன் முகத்தைப் பார்க்கவே உடல் நடுங்குகிறதே!...

"சரி, சரி! இனிமேல் இந்த ஆசாமியின் உறவே நமக்கு வேண்டாம்! மகா பயங்கரமான ஆசாமி! கூடிக் குலாவியே குட்டை உடைத்து விடுவார்! வாருங்கள், நாம் போவோம்! இனிமேல் இந்தப் பக்கமே தலைகாட்டக் கூடாது!" என்று சொல்லிக்கொண்டே அந்த இரண்டு ஆண் பேய்களும், திறந்து கிடந்த ஜன்னல் வழியே எகிறிக் குதித்து வெளியே பாய்ந்து ஓடின!

என் கன்னத்தை நறுக்கெனப் பிடித் 

துக் கடித்துவிட்டு மற்றொரு ஜன்னல் வழியே வெளியே தாவிக்குதித்து ஓடிமறைந்தது அந்தப் பெண் பேய்!

புனர் ஜன்மப் பெருமூச்சுவிட்டுத் தலை நிமிர்ந்தேன் நான். என் எதிரே மேஜைமீது அந்தப் பெண்பேய் எனக்குப் பரிசாகக்கொண்டு வந்த மண்டை ஓடு உருண்டு கிடந்தது.

நடுங்கும் கையால் அந்த மண்டை ஓட்டை எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தேன். விளக்கு வெளிச்சத்தில் நன்றாக உற்றுப் பார்த்தேன்.

உடனே என்னுள் எழுந்த கேள்வி இது தான்:

"இந்த மண்டை ஓடு, கிளியோபாட்ராவினுடையதா? அல்லது மாஜி மனிதனான சபேசனின் இரண்டாவது காதலி கோமளாவினுடையதா?"



சிரஞ்சீவி தரும் மர்ம நாவல்

புதிய மலிவுப் பதிப்புகள்

சுமார் 100 பக்கங்கள்

மூவர்ண ஆர்ட் அட்டை

# இந்திரலோக மர்மம்
# இரவு ஒரு மணி
# மன்மதக் கொலை
# மாஜி மனிதர்கள்
# மாயப் பதுமை
# மிஸ்டர் 420
# பலி பீடம்

●

ஒவ்வொன்றும்

விலை எட்டணா தான்

*ஏஜன்ஸி கமிஷன் 25%*

●

தனிப்பிரதி வேண்டுவோர்

9 அணாவுக்கு ஸ்டாம்பு அனுப்பி பெறலாம்.

# சிரஞ்சீவியின் நாவல்கள்

**மர்மக் கொலை** ... 1 0 0

கதைகள் படிப்பதில் அக்கரையோ, விருப்பமோ இல்லாதவர்களைக் கூடப் படிக்கும் படியாகத் தூண்டியது இந்நாவல். நாலாவது பதிப்பாக இது வெளிவந்திருப்பதே நாவலில் சிறப்பைக் காட்டும்.

**நீதி மயக்கம்** ... 1 0 0

கொலையுண்டு கிடந்தான் கணவன். குற்றவாளியாகக் கருதப்பட்டான் மற்ருெரு காதலன். "நீதி எங்கே? நேர்மை எங்கே?" என்று துடிதுடித்தாள் அவள்!

**மாயவில்லா** ... 1 0 0

கதை எழுதப்போய் கொலைக் குற்றத்தில் அகப்பட்டுக்கொள்கிருள் இளமை பூத்துக் குலுங்கும் ஒரு கட்டழகி. இதனுல் மாயவில்லா மர்மம் நிறைந்ததாகிவிடுகிறது.

**சூனியக்காரி** .... 1 0 0

மாத்தூர் காட்டிலே எத்தனையோ கொலைகள். பணத்திற்காகவா? பகைமை காரணமா? பரத்தையர் மோகத்திற்காகவா? பெரிய மர்மமாயிருக்கிறது இந்நாவலின் போக்கு.

ஸதர்ன் புக் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்
சென்னை - 2.

பிரமாதமாகப் போற்றப்பட்டது !

**அபார விற்பனையைக் காட்டியது!**

**மர்மத் தீவு .... .... 1 4 0**

மனித வாடை வீசாத ஒரு தீவிலே அடுத் தடுத்து மர்மக் கொலைகள் நிகழ்கின்றன. ஒரு நடிகை, மாணவி, சமூக சேவகி, குமாரனைக் காதலிக்கும் கிழவி, போலீஸ் இன்ஸ்பெக்டர், மஸ்லீன் மைனர், டாக்டர்—இத்தனை பேரும் கொலைப்படுகிறார்கள். எதற்காக என்பது விந்தை!

**காதலன் கொலை வழக்கு .... 1 4 0**

"இந் நாவலைப் படிக்க ஆரம்பித்தபோது இரவு சுமார் பதினோருமணி. ஆனால் முடிக்கும் வரை என்னால் கீழே வைக்க மனம் வரவில்லை. படித்து முடித்த பிறகுதான் தூங்க முடிந்தது" என்கிறார் காதல் ஆசிரியரான அரு. ராமநாதன்.

**ரத்தப் பசி .... .... 1 4 0**

இராவணன் முடியில் ஒரு காலத்தில் விளங் கிய ஒரு நீல மாணிக்கக் கல் எப்படியோ இந்தி யாவுக்கு வந்து எத்தனையோ திடசாலிகளைப் பலிவாங்கி விட்டது! இதன் மர்மம் என்ன?

**பேய் வீடு 1 8 0**

இந்தப் பேய் வீட்டிற்குள் துப்பறியும் ராஜா மணியும் மாலதியும் அகப்பட்டு படாதபாடுபடு கிறார்கள். சிரஞ்சீவியின் நாவல்களிலேயே அதிக விறுவிறுப்பு கொண்டது.

ஸதர்ன் புக் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்

**சென்னை - 2.**

சுவாரஸ்யமிக்கது ! மர்மமானது !

அத்தனையும் துப்பறியும் நாவல்களே

கல் நெஞ்சன் .... .... 1 8 0

இந்த நாவலில் சிரஞ்சீவியே துப்பறிய ஆரம்பித்து, கொலைக் குற்றத்திற்கும் ஆளாகிக் கோர்ட்டிலே நிற்கிறார்.

மரண யாத்திரை.... .... ... 1 8 0

திடுதிப்பென்று கோடீஸ்வரியானாள் ஒரு கட்டிளம் கன்னி. திரண்ட செல்வத்திற்கு வாரிசானதும் திரை கடலில் உலக யாத்திரை சென்றாள். அதுவே அவளது மரண யாத்திரையாக முடிந்தது!

சவப் பெட்டி .... ... 1 8 0

பேராசைக்காரப் பணக்காரர் நால்வர் குறுகிய காலத்தில் குபேரனாகிவிட ஆசைப்பட்டார்கள்! ஆனால் அவர்களுக்கு முடிவில் கிடைத்தது செல்வமல்ல! சவப்பெட்டிதான்!

பயங்கர மனிதன் .... .... 2 0 0

புது நடையில் துப்பறியும் கதைகள் எழுதுவதில் ஏகபோக உரிமையோடு தலை தூக்கி நிற்கும் சிரஞ்சீவியின் கதைகளில் விறுவிறுப்புக்குப் பஞ்சமில்லை என்பதை நிரூபிக்கிறது இந் நவீனம்.

ஸதர்ன் புக் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்

சென்னை - 2.

# பத்திரிகைகள் புகழ்ந்தன

**ஆகாசக் கோட்டை ... 2 0 0**

யார் கண்ணுக்கும் புலப்படாமல் ஆவி ரூபத்தில் நடமாடும் விசித்திர விஞ்ஞானி தங்க மலையைக் கண்டு பிடிக்கிறார்!

**புல்புல் ரம்பா — 1 8 0**

இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன் பெறுமதி கொண்ட நாட்டியக்காரி இறந்துவிடக் கூடாதே என்பதற்காகப் படாத பாடு படுகிறாள். ஆனால் அவள் நினைக்கிறபடி விதியும் நினைக்கிறதா?

**கன்னியின் சாகஸம் ... 2 0 0**

கண்ணகி மாதவியாகவும், மாதவி கண்ணகியாகவும் மதிக்கப்படுகிற இந்த நவயுகத்தில் கணவனைக் கண்கண்ட தெய்வமாக மதிக்கும் மனைவியின் உயிர் ஊசலாடியது சட்டத்தின் முன்னே!

**குல்மால் குபேரன் ... 1 8 0**

ஏழ்மையிலிருந்து இருவர் தன் முயற்சியால் பெரும் கோடீஸ்வரர் ஆகின்றனர். பணம் பகைமையைத் தருகிறது! ஸர். பட்டம் பெற்ற பிரபு குல்மால் செய்கிறார்! சிரஞ்சீவியின் நாவல்களிலே இது ஒரு தனி வழியில் நடைபோடுகிறது.

ஸதர்ன் புக் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்

சென்னை - 2.

தென்னாட்டை மட்டுமல்ல, இந்தியாவையே
கதிகலங்க வைத்தது ஒரு கோர சம்பவம்

அதுவே

ரங்க விலாஸ்

# படுகொலை

ஒரே இரவில் ஆறுபேர்கள் கொலைசெய்யப்பட்டனர். ஒரு யுவதி மூளை கலங்கத் தாக்கப்பட்டாள். நன்றியுள்ள ஒரு நாய் ரத்த வெள்ளத்திலே கிடந்தது. பத்தாயிரக் கணக்கான சொத்துகள் கொள்ளை போயின.

**இது கற்பனையல்ல! உண்மை சம்பவம்!**
**பெங்களூரில் நடைபெற்றது!**

இந்தப் பயங்கரப் படுகொலையில் எவ்வளவோ மர்மங்கள் பின்னிக் கிடக்கின்றன. எவ்வளவோ ரகசியங்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன. இது சம்பந்தப்பட்ட போலீஸ் நடவடிக்கைகள், வழக்கு விசாரணை, சாட்சிகளின் வாக்குமூலங்கள், வக்கீல்களின் வாதப் பிரதி வாதம், தீர்ப்பு முதலியவற்றையெல்லாம் ஒன்று திரட்டி வெகு சுவாரஸ்யமாக எழுதியிருக்கிறார்.

கொலைப்பட்டோர், குற்றம் சாட்டப்பட்டோர், வாதாடிய வக்கீல்கள், குற்றம் நடந்த பங்களா, சோதனையிடப்பட்ட இடங்கள். ஆகியவற்றின் தத்ரூப போட்டோ படங்களும் இதிலே சேர்க்கப்பட்டிருக்கின்றன. மூவர்ண அட்டைப் படம்.

**சிரஞ்சீவி** எழுதியது — **விலை 1—8—0**

# இதர மலிவுப் பிரசுரங்கள்

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| புஷ்ப ராணி ... | 0 | 8 | 0 |
| இறந்தது யார்? ... | 0 | 8 | 0 |
| மரண ஓலம் ... | 0 | 8 | 0 |
| சுந்தரி .. | 0 | 8 | 0 |
| விசித்திர வனிதைகள் ... | 0 | 8 | 0 |
| கள்ள வியாபாரி ... | 0 | 8 | 0 |
| மிஸ் சாந்தி துப்பறிகிறார் ... | 0 | 12 | 0 |
| வலையில் சிக்கிய வனிதை ... | 1 | 4 | 0 |
| எரிந்த வீடு ... | 1 | 0 | 0 |
| சந்திர குமார் ... | 1 | 8 | 0 |
| மோகன விலாஸ் மர்மம் ... | 0 | 8 | 0 |
| ஓட்டல் காஷ்மீர் மர்மம் ... | 0 | 8 | 0 |
| திருடர்கள் ஜாக்கிரதை ... | 0 | 8 | 0 |
| மறைந்த நடிகை ... | 0 | 8 | 0 |
| மேடைப் பாடல்கள் ... | 0 | 4 | 0 |
| இதோ இன்பம் ... | 1 | 0 | 0 |
| கள்ளனைத் திருத்திய கன்னி ... | 1 | 0 | 0 |
| பலிபீடம் ... | 0 | 8 | 0 |

ஸ்டார் புக் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ்
சென்னை - 2.


SERFOGI'S SARASWATHI MAHAL LIBRARY + TANJORE

# பறக்கும் தட்டு

## அகண்ட பூமியை ஆச்சரியத்தில் ஆழ்த்துகிற இந்த விந்தை விமானங்கள்....

**உண்மைதானா? இவை எங்கிருந்து வருகின்றன? இதில் வரும் மர்ம மனிதர்கள் யார்? இதைப் பற்றி விஞ்ஞானிகள் என்ன சொல்லுகிறார்கள்? விமானிகள் - என்ன - நிரூபிக்கிறார்கள்?**

இதைப் போன்ற கேள்விகள் இப்போது இந்த உலக மெங்கும் எதிரொலிக்கின்றன. இதைப் பற்றிய விபரங்களைக் கேட்க மக்கள் மட்டில்லாத ஆர்வத்தோடு இருக்கிறார்கள். விஞ் ஞானத்தில் முன்னேறி யிருக்கும் அமெரிக்கா போன்ற நாடுகள் பறக்கும் தட்டைப் பின் தொடர்ந்து வேவு பார்க்கவும் அது பற்றிய இர கசியங்களை அறிந்து கொள்ளவும் தனி இலாகா ஒன்றை இதற்கென்றே நியமித்திருக்கிறது. பல ரகசியங்களும் ஒன்றன்பின் ஒன்ருக வெளியாகிக் கொண்டுமிருக்கின்றன. விமானிகள் பலர் அதைத் துரத்திச் சென்று விபத்துக்கும் உள் ளாகியிருக்கிறார்கள். உலக மெங்கும் வளைய வந்து சுற்றிவரும் பறக்கும் தட்டைப் பற்றி அறிந்துகொள்ள அத்தனை பேரும் ஆவல்கொண் டிருக்கிறார்கள்.

அதைப் பற்றிய எல்லா விபரங்களும் ரகசி யங்களும் கொண்டதே இந்நூல். மிகமிக சுவா ரஸ்யமான தகவல்களை இதில் படிக்கலாம், திடுக்கிடும் உண்மை சம்பவங்கள் நிறைந்தது.

**சிரஞ்சீவி எழுதியது. விலை ரூபா 2.**